மதுரைச் சொக்கநாதர்

# தமிழ்விடு தூது

பொழிப்புரை



புலவர் ம.அய்யாசாமி

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Madurai Chokkanathar Tamizh vidu Thoothu |
| Author | : | Pulavar M. Ayyasamy |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 2006 |
| Paper Used | : | White Printing, D.Crown |
| | : | 11.6 Kg. |
| Size of the book | : | 18.5 X 12.5 cm |
| Type | : | 12.5 Point |
| No. Pages | : | 168 |
| No. of Copies Printed | : | 1000 |
| Printer | : | G.V. GRAPICS. Chennai |
| Publisher | : | THIRUMUDI PATHIPPAGAM Pondicherry - 605 110 |
| **Price** | : | **Rs. 45.** |

மதுரைச் சொக்கநாதர்

# தமிழ் விடு தூது

புலவர் ம. அய்யாசாமி,
எம்.ஏ., எம்.எட்.,

திருமுடி பதிப்பகம்,
38, கிழக்கு சன்னதி தெரு,
வில்லியனூர்,
புதுவை மாநிலம் - 605 110

# முன்னுரை

இலக்கியம் கற்பது இன்பத்தை அளிக்கவல்லது; அறிவைப் பெருக்குவது; ஆற்றலைத் தருவது. முற்கால இலக்கியங்களைக் கற்பதற்குத் தகுந்த எளிய உரைகள் பல நூல்களுக்கு இல்லை. நாற்பது ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னே புலவர் பாட இலக்கியங்களைக் கற்கப் பலரும் பெரிதும் துன்பப்பட்டனர்.

சங்க இலக்கிய நூல்களுக்குச் சில உரைகள் வந்துள்ளன. பிற்கால இலக்கியங்களுக்கும் சில உரைகள் வெளியிடப் பட்டுள்ளன. இலக்கியத்திற்கு உரை எழுதுவது பெரிதும் கடினமான செயலே.

சிற்றிலக்கிய வகையில் தூது என்பது ஒன்றாகும். தூது நூல்கள் பல இருப்பினும் அவற்றுள் சிறந்ததாக விளங்குவது தமிழ் விடு தூதாகும்.

இந்நூலுக்கு எளிய உரை ஒன்றைத் தயாரித்தால் எல்லோருக்கும் பயன்படும் என்று என் நண்பர் திருமிகு வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்கள் கூறினார்கள். அவருடைய தூண்டுதலே என்னை இப்பணியில் ஈடுபடச் செய்தது.

சங்க இலக்கியங்களில் பெயர் தெரியாப் புலவர்கள் இயற்றிய பாடல்கள் பல உள்ளன. இயற்றிய ஆசிரியரே இன்னார் என்று அறிய இயலாத நூல்களில் 'தமிழ்விடுதூது'ம் ஒன்றாகும்.

ஆசிரியர், தமிழின் சிறப்பையும், சைவசமயத்தின் மேன்மையையும், சிவபெருமானின் திருவிளையாடல்களையும், தமிழில் உள்ள இலக்கண இலக்கியங்கள் குறித்தும் எழுதியதில் இருந்து அவருடைய நுண்மாண் நுழைபுலத்தையும் ஆழ்ந்து அகன்ற கல்வி அறிவையும் உணரலாம். முப்பாலில் உள்ள பலகுறள்கள் இந்நூலில் பல இடங்களில் முழுமையாக எடுத்தாளப்பட்டுள்ளன.

மூல நூலில் உள்ள அடிகள் அப்படியே வெளியிடின் படிப்போர்க்குக் கடினமாக இருக்கும் என்று அவை எளிமைப் படுத்திப் பிரித்து வெளியிடப்பட்டுள்ளன. அவ்வாறு செய்திருப்பதில் படிப்போர்க்குச் சில இடங்களில் தளை தட்டுவதுபோல் ஒரு மாயை காணப்படும். இந்நூல் கலிவெண்பாவால் ஆனது.

இந்நூலுக்கு முன்னோரின் துணையோடு எளிய பொழிப்புரையும் அருஞ்சொற்பொருளும் சில இடங்களில் விளக்கமும் அளிக்கப்பட்டுள்ளன. மாணவர்கள் எளிதாய் இலக்கியம் கற்க ஆர்வத்தைத் தூண்டும் வகையில் எளிய பொழிப்புரை தரப்பட்டு உள்ளது. இந்நூல், கற்றோர்க்கும், கற்போர்க்கும் பெரிதும் உதவியாக இருக்கும் என்று நம்புகிறேன்.

இந்நூலை அழகிய முறையில் அச்சிட்டு வெளியிட்ட வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்களுக்கும், நண்பர்களுக்கும் என் நன்றி. இந்நூலை வாங்கிப் பயன்படுத்தி மேலும் இத்தகைய பணியில் எனக்கு ஊக்கம் அளிக்க வேண்டுகிறேன்.

புதுச்சேரி

அன்பன்

**ம. அய்யாசாமி**

# பதிப்புரை

தமிழ்மொழியில் காலந்தோறும் பலதுறை நூல்கள் தோன்றியுள்ளன. தமிழ்கற்ற புலவர் பெருமக்கள், தங்கள் தங்கள் விருப்பப்படி தகுதிமிகு படைப்புகளைத் தந்து வருகின்றனர்.

நம்நாட்டில் மனித சமுதாயத்தை வேற்றுமைப்படுத்தும், பிளவுபடுத்தும் சமயங்கள் பல தோன்றியுள்ளன. ஆயினும் தமிழ்மண்ணில் தமிழ் மட்டும் அனைவரையும் அணைத்து வருகிறது.

மானிடத்துக்கு, அதன் மேன்மைக்கு, முன்னேற்றத்துக்கு அவ்வப்போது தேவைக்கேற்பச் செந்தமிழ்மொழி சீர்பெற்றுத் தழைத்து வருகிறது.

பண்பாட்டோடு பருவகால வளர்ச்சிகளையும் கொண்டு வளர்கிற சிறப்பு, செழிப்பு, சீர்மை நம் தமிழ்மொழிக்கு உண்டு. அப் பெருமையை, உயிரூட்டத்தை அளிப்போர் நம் தமிழ்ச் சான்றோரே ஆவர்.

வருங்காலத் தேவையறிந்து நிகழ்காலப் படைப்புகளை உருவாக்குவோர் தமிழறிந்த புலவோர் ஆவர். அத்தகையோர் படைத்தளித்துச் சேர்த்திருக்கும் பல நூறு செந்தமிழ்ச் செல்வப் பேழைகள் நம்மிடம் உள்ளன. அவை மறைந்து போய் விடாமல் நினைவுக்கு நேர்படுத்துதல் நம் கடமையாகிறது.

பழையன கற்றுப் புதியன படைத்தலே வழிவழி மரபாய் வந்துள்ள நடைமுறை! அம் முறையில் இந்நூல் வருகிறது.

**தமிழ் விடு தூது!**

தமிழையும் சைவநெறியையும் தம் இருகண்களாகப் போற்றிய புலவர் ஒருவர் அமைத்துள்ள புதுவகைப் பனுவல் இது!

மொழிவழியே வளர்ந்த சைவ சமயக் கதைகளை, வரலாறுகளை ஒருசேரத் தந்துள்ள செய்யுள் மாலை இது! தமிழ்மொழியின் பிறப்பு, வளர்ச்சி, ஆற்றல் முதலியவற்றை முறையாக எடுத்துரைக்கும் இனிய பாக்கள் கொண்டது இத்தூது.

எண்ணற்ற தூது நூல்கள் இருக்கின்றன. புலவர்தம் புனையா ஓவியங்களாய்ப் பொலியும் தூதுநூல்கள் தமிழ்ச் சுவையுள்ளவையே! ஐயமில்லை!

**தமிழ்விடு தூது** பத்தோடு ஒன்றாகப் படைக்கப் பெற்றதல்ல!

**சத்தான தமிழின் வித்தாரப் படைப்பு!**
**முத்தான உயர்வின் முறையான படைப்பு!**
**கொத்தாகத் தமிழ்ப்பற்றைக் கொண்டுதரும் பரிசாகும்.**
**தமிழறிந் தோர்க்கும் சுவைக்கும்; தமிழ் மறந்தோர்க்கும் இனிக்கும்!**

இது, உண்மையும் கற்பனையும் உறவாடும் படைப்பு! உண்மை வரலாறுகளையே உவமைப்படுத்தும் உயர்வு! உள்ளமெல்லாம் உயிரெல்லாம் தமிழான புலவரின் தகுதிமிக்க படைப்பு!

தமிழே பேச்சாகிறது; மூச்சாகிறது. செயலாகிறது; வாழ்வாகிறது!

உள்ளம் பிழியப் பிழியப் பாடிய தமிழ்நெஞ்சினர் பேரும் அறியோம்; ஊரும் அறியோம்! காலமும் அறியோம்!

நமக்கு ஊர்பேர் தெரியாத அப்புலவர் ஞாலம் உள்ளவரை, நற்றமிழ்ப் பயன் உள்ளவரை அவர்தம்நூலின் புகழோடு வாழ்வார்! புகழாக வாழ்வார்! தமிழாகவே வாழ்வார்!

தாய்த்தமிழை ஒதுக்கி வாய்மொழியில் வேறுபட்டுள்ள இன்றைய துன்ப நிலையில், தேன்தமிழாய்த் திரண்டுள்ள இத் தமிழமுதைப் புதுவிருந்தாய்ப் படைத்துப் பூரித்து மகிழ்கின்றோம்.

நன்கு தமிழ்பயின்று, நல்ல தமிழாசிரியராயும் தகுதி மிகும் தலைமையாசிரியராகவும் பணியாற்றிச் சிறந்தவர் புலவர் ம. அய்யாசாமி. சேலம் பகுதியில் சிறப்பாய்ப் பணிபுரிந்து, ஓய்வுபெற்றுச் செந்தமிழ்ப் புதுவையில் சீரோடு வாழ்கின்றார்.

செந்தமிழர் நாற்றங்காலில் சீரழிக்கும் நச்சுக்கிருமிகளை அழிப்பதற்கும் நல்ல தமிழ் உணர்வை வளர்ப்பதற்கும் சிறந்ததோர் ஊட்டச்சத்தை நம்மவர்க்கு எடுத்தளிக்கின்றார்.

நோய்கொண்ட பிள்ளைக்குத் தாய்தந்த அமுதாக, இந்நூல் பொழிப்புரையுடன் வருகிறது. காலமறிந்து செயலாற்றும் கடமையாளர் புலவர் ம. அய்யாசாமி நன்றிக்கும் பாராட்டுக்கும் உரியவராகிறார்.

இக்கால மாணவர்க்கு உதவும் வண்ணம் எளியமுறையில் பொழிப்புரை எழுதியது காலக் கடமை என்று கருதத்தக்கதாகும்.

ஓலையில் முடங்கிய ஒளிமிக்க தமிழ்விடுதூது எனும் பாமாலையை அச்சில் பதித்து வெளிப்படுத்திய அறிஞர் பெருந்தகை தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாதையர் அவர்களை தமிழ் உலகமே மறவாமல் போற்றிப் புகழ்கிறது.

அரிய விளக்கமுடன் பொருள்சிறப்பும் தந்து அச்சிட்டளித்த அய்யர் அவர்கட்கு முதல் நன்றி கூறி அவர் துணையோடு இந்நூலை வெளியிடுகின்றோம்.

எழுத்தின் பயனைப் படிப்போர் பெற்றுப் புதுப்பயன் வளர்க்கவேண்டும் என்பதே எம் விழைவு! வேண்டுகோள்!

இல்லந்தோறும் தமிழர் இதயந்தோறும் என்றென்றும் இருந்து விளங்க வேண்டுமென்றே வருகிறது தமிழ்விடுதூது!

நெஞ்சிலே பதித்திடுங்கள்! தமிழ் இன்பம் பெருகட்டும்!

அன்புடன்

வில்லியனூர் **பதிப்பகத்தார்**

## உள்ளடக்கம்

# மதுரைச் சொக்கநாதர்
# தமிழ் விடு தூது
(கலிவெண்பா)

1. சீர்கொண்ட கூடல் சிவராச தானிபுரத்து
ஏர்கொண்ட சங்கத்து இருந்தோரும் - போர்கொண்டு

2. இசையுந் தமிழரசு என்று ஏத்துஎடுப்பத் திக்கு
விசையஞ் செலுத்திய மின்னும் - நசையுறவே

3. செய்யசிவ ஞானத் திரள்ஏட்டில் ஓர்ஏடு
கையில் எடுத்த கணபதியும் - மெய்அருளால்

4. கூடல் புரந்து ஒருகால் கூடல் புலவர்எதிர்
பாடல்அறி வித்த படைவேளும் - வீடுஅகலா

5. மன்னும்மூ வாண்டில் வடகலையும் தென்கலையும்
அன்னைமுலைப் பாலின் அறிந்தோரும் - முன்னரே

6. மூன்றுவிழி யார்முன் முதலைஉண்ட பிள்ளையைப்பின்
ஈன்றுதரச் சொல்லின் இசைத்தோரும் - தோன்று அயன்மால்

7. தேடிமுடி யாஅடியைத் தேடாதே நல்லூரில்
பாடிமுடியாப் படைத்தோரும் - நாடிமுடி

8. மட்டுஓலை பூவனையார் வார்ந்தஓலை சேர்த்துஎழுதிப்
பட்டோலை கொள்ளப் பகர்ந்தோரும் - முட்டாதே

9. ஒல்காப் பெருந்தமிழ் மூன்று ஓதிஅருள் மாமுனியும்
தொல்காப் பியம்மொழிந்த தொல்முனியும் - மங்காச்சொல்

10.பாதிரம்கொண் டேபதிபால் பாய்சுவைப் பன்னிரண்டு
சூத்திரம்கொண் டேபிணித்த தூயோரும் - நேத்திரமாம்

11.தீதில் கவிதைத் திருமா ளிகைத்தேவர்
ஆதிமுனிவர் அனைவோரும் - சாதியுறும்

12.தந்திரத் தினால்ஒழியாச் சார்வினையைச் சாற்றுதிரு
மந்திரத்தி னால்ஒழித்த வல்லோரும் - செந்தமிழில்

13.பொய்யடிமை இல்லாப் புலவர்என்று நாவலர்சொல்
மெய்அடிமை சங்கத்து மேலோரும் - ஐயடிகள்

14.காடவரும் செஞ்சொல் கழறிற் றுஅறிவாரும்
பாடஅரும் தெய்வமொழிப் பாவலரும் - நாடஅரும்

15.கல்லாதார் சிங்கம்எனக் கல்விகேள் விக்குரியர்
எல்லாரும் நீயாய் இருந்தமையால் - சொல்ஆரும்

16.என்அடிக ளேஉனைக்கண்டு ஏத்தின்இடர் தீரும்என்றுஉன்
பொன்னடி களேபுகலாப் போற்றினேன் - பன்னிய மென்

17.பஞ்சிபடா நூலே; பலர்நெருடாப் பாவே; கீண்டு
எஞ்சிஅழுக்கு ஏறா இயற்கலையே - விஞ்சுநிறம்

18.தோயாத செந்தமிழே; சொல்லோர் உழவர்அகம்
தீயாது சொல்விளையும் செய்யுளே! - வீயாது

19.ஒருகுலத்தும் வாராது உயிர்க்கு உயிராய் நின்றாய்
வருகுலம்ஓர் ஐந்தாயும் வந்தாய் - இரு நிலத்துப்

20.புண்ணியம்சேர் உந்திப் புலத்தே வளிதரித்துக்
கண்ணிய வாக்காம் கருப்பமாய் - நண்ணித்

21.தலைமிடறு மூக்குஉரத்தில் சார்ந்து இதழ் நாத் தந்தம்
உலைவுஇலா அண்ணத்து உருவாய்த் - தலைதிரும்பி

22.ஏற்பமுதல் முப்பதுஎழுத் தாய்சார்பு இருநூற்று
நாற்பது எழுத்தா(ய்) நனிபிறந்தாய் - மேற்படவே

23.எண்முதலா கப்பகரும் ஈர்ஆறு எனும்பருவம்
மண்முதலோர் செய்து வளர்க்குநாள் - கண்மணிபோல்

24.பள்ளிக்கூ டத்துஅசையாம் பற்பலதொட் டில்கிடத்தித்
தள்ளிச் சிறார்கூடித் தாலாட்டி - உள்இலகு

25.மஞ்சள் குளிப்பாட்டி மைஇட்டு முப்பாலும்
மிஞ்சப் புகட்ட மிகவளர்ந்தாய் - மஞ்சரையே

26.பன்னிஒரு பத்துப் பருவம்இட்டு நீவளர்த்தாய்
உன்னை வளர்த்துவிட ஒண்ணுமோ - முன்னே

27.நினையும் படிப்புஎல்லா(ம்) நின்னைப் படிப்பார்
உனையும் படிப்பிப்பார் உண்டோ? - புனைதருநல்

28.செய்யுள்சொல் நான்கும்உயர் செந்தமிழ்ச்சொல் ஓர்நான்கும்
மெய்யுள் பொருள்ஏழ் விதத்திணையும் - மைஇல் எழுத்(து)

29.ஆதியாப்பு எட்டும் அலங்காரம் ஏழ்ஐந்தும்
பேதியாப் பேர்எழில்மாப் பிள்ளையாய்ச் - சாதியிலே

30.ஆங்குஅமை செப்பல்பண் அகவல்பண் துள்ளல்பண்
தூங்கல்பண் பட்டத்துத் தோகையரா - ஓங்குமனத்து

31.எண்கருவி ஐந்து ஈன்றிடும் நூற்று மூன்றான
பண்களும்பின் கல்யாணப் பாவையராய் - எண்கொளும்

32.நல்தா ரகமா(ய்) நவரசமாம் பிள்ளைகளைப்
பெற்றாய், பெருவாழ்வு பெற்றாயே! - உற்றுஅகலாப்

33.பண்கள்முதல் பெண்களொடும் பாலரொடு நாடகமாம்
பெண்கொலுவில் வீற்றிருக்கப் பெற்றாயே - மண்புகழத்

34.தாழ்வுஇலா அட்டாதச வன்னனைகள் எனும்
வாழ்வுஎலாங் கண்டு மகிழ்ந்தாயே - ஆழ

35.நெடும்கோல வையையில் என்நேசர் மேல்பட்ட
கொடுங்கோல்செங் கோல்ஆகக் கொண்டாய் - அடங்காத

36. எம்கோவே பத்துஎன்று இயம்புதிசைக்கு உள்ளேநின்
செங்கோல் செலாத திசை உண்டோ? - இங்கேஉன்

37.தேசம் ஐம்பத்து ஆறில் திசைச்சொல் பதினேழும்
மாசுஅறநீ வைத்த **குறு மன்னியரோ** - வீசு

38.குடகடலும் கீழ்கடலும் கோக்குமரி யாறும்
வடவரையும் எல்லை வகுத்தாய் - இடைஇருந்த

39.முன்உறும்தென் பாண்டி முதல்புனல்நாடு ஈறுஆன
பன்னிரண்டு நாடும்அப் **பால்நாடோ** - அந்நாட்டுள்

40.வையை கருவை,மரு தாறு,மரு வூர்நடுவே
ஐயநீ வாழும் அரண்மனையோ-செய்யபுகழ்

41.மூவேந்தர் வாகனமா(ய்) மூஉலகும் போய்வளைந்த
பாவேந்தே, நீபெரிய பார்வேந்தோ!-காஏந்து

42.விண்ணவரும் காணரிய வேதஆ கமங்கள் எல்லாம்
புண்ணியனே உன்றன் புரோகிதரோ! - எண்ணஅரிய

43.நல்லபெருங் காப்பியங்கள் நாடகஅ லங்காரம்
சொல்அரசே! உன்னுடைய தோழரோ! - தொல்உலகில்

44.பார்புரக்கும் கோவே,நல் சாத்திரங்கள் எல்லாம்உன்
பார்புரக்கும் சேனா பதிகளோ! - வீரர் அதிர்

45.போர்ப்பா ரதமும் புராணம் பதினெட்டும்
சீர்ப்பாவே உன்னுடைய சேனைகளோ! - பார்ப்பார்கள்

46.அக்கர வர்த்திஎன லாம்என்போர் பூலோக
சக்கர வர்த்தியும்நீ தான்அன்றோ! - சக்கரம்முன்பு

47.ஏந்தி நெடுந் தேர் மேல் ஏறிச் சுழிகுளம்
நீந்திஓர் கூட(ம்) நிறைசதுக்கம் - போந்து

48.மதுரம் கமழ்மாலை மாற்றுஅணிந்து சூழும்
சதுரங்க சேனை தயங்கச்-சதுராய்

49.முரசம் கறங்க, முடிவேந்தர் சூழ
வரசங்கம் மீதுஇருந்து வாழ்ந்தே-அருள்வடிவாய்

50.ஓங்குபுகழ் மூவர் ஒருபா ஒருபஃதும்
ஆங்குஅவைசொல் வாதவூ ராளிசொல்லும் - **ஓங்கும்அவன்**

51.கூற்றாய் அரன்எழுதும் கோவையும் கோதுஇல்தாய்
மாற்றா இரட்டை மணிமாலையும் - தேற்றம்உறப்

52.பற்றாம் இலக்கணநூல் பாவுநூல் பாஅறிந்து
கற்றார் வழங்கு**பஞ்ச காப்பிய**மும் - கொற்றவருக்கு

53.எண்ணிய வன்னனைகள் ஈர்ஒன் பதும்அறியக்
கண்ணியம் மிக்கபெரும் காப்பியமும்-நண்ணியே

54.இன்புறு சேரன்அரங் கேற்ற மகிழ்ந்து அம்பலத்தான்
அன்புறுபொன் **வண்ணத்துஅந் தாதி**யும்-முன்புஅவர்சொல்

55.மாத்தமிழா(ம்) **மும்மணி மாலை**யும் பட்டினத்தார்
கோத்துஅணிந்த **மும்மணிக் கோவை**யும் - மூத்தோர்கள்

56.பாடி அருள்**பத்துப் பாட்டும்எட் டுத்தொகை**யும்
கேடுஇல் **பதினெட்டுக் கீழ்க்கணக்கும்** - ஆடகமா

57.வெற்புஅனையார் மாதை விமலர்இடத் தேஇருவர்
கற்பனையால் சொன்ன **கலம்பகமும்** - முற்படையோ(டு)

58. ஆடல் கலிங்கம் அழித்து ஆயிரம் ஆனைகொன்ற
பாடற்கு அரிய **பரணி**யும் - கூடல்

59. நராதிபன் கூத்தன்எதிர் நண்ணியோர் கண்ணிக்கு
ஓர்ஆயிரம்பொன் ஈந்த **உலா**வும் - பராவும்அவன்

60. **பிள்ளைத் தமிழும்** உன்னால் பேராத பல்குரவர்
வெள்ளத் தினும் மிகுத்தோர் மெய்காப்ப - உள்ளத்து

61. வீரியம் செய்து வினைஒழிய வே,ராச
காரியம் செய்யும் கவிதையே - பாரில்

62. அரியாசனம் உனக்கே ஆனால் உனக்குச்
சரியாரும் உண்டோ தமிழே - விரிவுஆர்

63. திகழ்பா ஒருநான்கும் செய்யுள் வரம்பு ஆகப்
புகழ்பா இனங்கள்மடைப் போக்கா - நிகழவே

64. நல்ஏரி னால் செய்யுள்நாற்கரணத்து ஏர்பூட்டிச்
சொல்ஏர் உழவர் தொகுத்து ஈண்டி - நல்லநெறி

65. நாலே விதையா(ய்) நனிவிதைத்து நாற்பொருளும்
மேலே பலன்பெறச் செய் விக்கு(ம்)நாள் - மேலோரில்

66. பாத் தனதாக் கொண்டபிள்ளைப் பாண்டியன், வில்லி, ஒட்டக்
கூத்தன்இவர் கல்லாது கோட்டிகொளும் - சீத்தையரைக்

67. குட்டிச் செவிஅறுத்துக் கூட்டித் தலைகள்எல்லாம்
வெட்டிக் களைபறிக்க மேலாய்த்தூர் - கட்டி

68.வளர்ந்தனைபால் முந்திரிகை வாழைக் கனியாய்க்
கிளர்ந்தகரும் பாய்நாளி கேரத்து - இளங்கனியாய்த்

69.தித்திக்கும் தெள்ளமுதாய்த் தெள்ளமுதின் மேலான
முத்திக் கனியே,என் முத்தமிழே - புத்திக்குள்

70. உண்ணப் படும்தேனே, உன்னோடு உவந்துரைக்கும்
விண்ணப்பம் உண்டு; விளம்பக்கேள் - மண்ணில்

71.குறம்என்று பள்ளுஎன்று கொள்வார் கொடுப்பாய்க்
குறவுஎன்று மூன்றினத்தும் உண்டோ - திறம்எல்லாம்

72.வந்துஎன்றும் சிந்தாமணியாய் இருந்தஉனைச்
சிந்துஎன்று சொல்லியநாச் சிந்துமே - அந்தரமேல்

73.முற்றுஉணர்ந்த தேவர்களும் முக்குணமே பெற்றார்; நீ
குற்றம்இலாப் பத்துக் குணம்பெற்றாய் - மற்றொருவர்

74.ஆக்கிய வண்ணங்கள் ஐந்தின்மேல் உண்டோ,நீ
நோக்கிய வண்ணங்கள் நூறுஉடையாய் - நாக்குஉலவும்

75.ஊனரசம் ஆறுஅல்லால் உண்டோ செவிகள் உணவு
ஆன நவரசம்உண் டாயினாய் - ஏனோர்க்கு

76.அழி[illegible] ளப்புஒன்று அலதுஅதிகம் உண்டோ
ஒழிய[illegible] ப்புஎட்டு உடையாய் - மொழிவேந்தர்

77.வாங்கு பெ[illegible] கோல் வகைமூன்றே பெற்றார்,நீ
ஓங்குபொரு[illegible] ளங்[illegible] கஎட்டு உள்ளாயே - பாங்குபெற

78.ஓர்முப்பால் அன்றிஐம்பால் உள்ளாய உனைப்போல
சிறப்பதும் படைத்த செல்வமார்? - சேரமான

79.தன்னடிக் குஅண்டு தலைவிடுத்தாய் ஏழுதலைகூடன
பொன்னடிக்குஉண்டு என்பதுஎன்ன புத்தியோ - என்அரமே

80.திண்பா வலர்க்குஅறிவாம் செந்தமிழாய் நின்றஉன்னை
வெண்பாஎன்று ஓதுவது மெய்தானோ - பண்புசா

81.ஒலிப்பாவே சங்கத்து உகம்மூன்று இருந்தாய்
கலிப்பாஎன்று ஓதல் கணக்கோ - உலப்புஇல்

82.இருள்பா மருள்மாற்றி ஈடேற்றும் உன்னை
மருட்பாஎன்று ஓதல் வழக்கோ - தெருள்பாப்

83.பொருத்தம்ஒரு பத்துப் பொருந்தும்உனைத் தானே
விருத்தம்என்று சொல்லல்விதியோ - இருள்குவையை

84.முந்திஒளி யால்விலக்கு(ம) முச்சுடர்என் பார்உனைப்போல்
வந்துஎன் மனத்துஇருளை மாற்றுமோ - சிந்தா

85.மணிகொடையின் மிக்கது எவையார் வண்கொடையும் உன்பேர்
அணியும் பெருமையினால அன்றோ - தணியும்

86.துலங்குஆரம் கண்டமாம் தோள்வளைமற்று,எல்லாம்
அலங்காரமே உனைப்போல் ஆமோ - புலம்காணும்

87.உன்னைப் பொருள்என்று உரைக்குந் தொறும்வளர்வாய்
பொன்னைப் பொருள்என்னப் போதுமோ - கன்னமிட

88. மன்னர் கவர்ந்தும் வளர்பொருளை கைப்பொருள்கள்
என்ன பொருள்உனைப்போல் எய்தாவே - நன்னெறியின்

89.மண்ணில் புகழ்உருவாய் வாழ்வதற்கும் வாழுநர்
விண்ணில்போய்த் தேவுஉருவாய் மேவுதற்கும்-
எண்ணியுனைக்

90.கொண்டுபுகழ் கொண்டவர்க்கே கூடும்உனைக் கூடாத
தொண்டருக்குத் தென்பாலே தோன்றுமால் - தண்டமிழே

91.ஈங்குஉனது சங்கத்தால் ஈசர் உயர்ந்தாரோ
ஓங்கும்அவ ரால்நீ உயர்ந்தாயோ - பூங்கமல

92.வீடுஆளும் வாணிஅங்கை மேலே இருந்தாயோ
ஏடுஆக உன்மேல் இருந்தாளோ - ஆடுஅரவத்

93.தாழ்பாயல் ஆளரைநீதானே தொடர்ந்தாயோ
சூழ்பாயோடு உன்னைத் தொடர்ந்தாரோ - வாழ்வேஎன்று

94.ஓதிமுனி கேட்க உனைமுருகர் சொன்னாரோ
சோதிஅவரைநீ சொற்றனையோ - பேதியா

95.நேசர்உனக் கேபொருளாய் நின்றாரோ நீள்மதுரை
வாசருக்கு நீபொருளாய் வந்தாயோ - பாசம்உறும்

96.என்செய்தி நீகண்டு இரங்குவது நீதியல்லால்
உன்செய்தி நானோ உரைசெய்வேன் - இன்சொல்லாய்

97. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக என்ற - சொற்குள்ளே

98.எல்லார்க்கும் புத்தி இயம்பிக் கரைஏற்ற
வல்லாய்; உனக்குஉரைக்க வல்லேனோ - சொல்லியஉன்

99.ஈரடிக்குள் ளேஉலகம் எல்லாம் அடங்கும்எனின்
நேரடிக்கு வேறே நிலன்உண்டோ - ஓர் அடிக்குஓர்

100.ஆயிரம் பொன்இறைக்கும் ஐயரை. வீதியிலே
போய்இரந்து தூதுசொல்லப் போக்கினோ ய் - ஆய்இருந்தும்

101.மாண்பாய்ஓர் தூதுசொல்லி வாஎன்பேன்; என்வருத்தம்
காண்பாய்என் பெண்மதிநீ காணாதே - ஆண்பனைநல்

102.பெண்பனையாய் ஆக்கினையால்; பெண்களிலே
காரைக்கால்
வண்பதியார் ஔவைஎன வந்துஉதித்தாய் - நண்புஆர்

103.திலதவதி யார்உடனே சென்மித்தாய் மாடக்
குலதவதி யானத்தர் கூடல் - பலதவம்சேர்

104.மேனியார் கண்டிகையும் வெண்ணீறும் கண்டுஉருகும்
மானியார் தேசிகனா(ய்) வந்துஉதித்தாய் - ஞானியார்

105.துங்க மகவாகத் தோன்றி வனப் பகைக்கும்
சிங்கடிக்கும் தாதையாய்ச் சீர்செய்தாய் - இங்குநீ

106.பெண்கள்எல்லாம் வாழப் பிறந்தமையால் என்மனத்தில்
புண்கள் எல்லாம் ஆறப் புரிகண்டாய் - ஒண்கமலத்து

107.அன்னந் தனைவிடுப்பேன்; அன்னந்தான் அங்கு அவரை
இன்னந்தான் கண்டுஅறியாது என்பரே - மன்எந்தாய்

108.அப்பால்ஓர் வண்டைஅனுப்பின் அவர்காமம்
செப்பாதே என்றால திகைக்குமே! - தப்பாது

109. மானைப்போய்த் தூதுசொல்லி வாஎன்பேன்; வல்லியபூந்
தானைப் பரமர்பால் சாராதே - ஏனைப்பூங்

110.கோகிலத்தை நான்விடுப்பேன் கோகிலமும் காக்கைஇனம்
ஆகி வலியானுக்கு அஞ்சுமே - ஆகையினால்

111.இந்தமனத் தைத் தூதாய் ஏகுஎன்பேன்; இம்மனமும்
அந்த மனோ தீதர்பால் அண்டாதே - எந்தவிதம்

112.என்றுஎன்று இரங்கினேன் என்கவலை எல்லாம்பொன்
குன்றுஅனையாய் உன்னுடனே கூறுகேன் - சென்றாலும்

113.பண்ணிய பத்தொன் பதினா யிரத்துஇருநூற்று
எண்ணிய தொண்ணூற்று ஒன்று எனுந்தொடையாய்-
நண்ணி

114.ஒருதொடை வாங்கி உதவாயோ? ஓர்சே
விருதுஉடை யார்க்குநீ வேறோ?-தருமிக்கே

115.ஓர்வாழ்க்கை வேண்டி உயர்கிழிகொள் வான்,கொங்கு
தேர்வாழ்க்கை என்றுஎடுத்த செய்தியும் - கீரன்

116.இசையா வகையின் இயம்பினான் என்றே
வசையாடித் தாக்கித்த வர்க்கும் - இசையான

117.பாட்டுக்கு இரங்கிஒரு பாணனுக்குச் சேரலன்மேல்
சீட்டுக கவிவிடுத்த சீராட்டும் - பாட்டியலில்

118.நாத்திரமா மேவுபொருள் நன்றா(ய்) அறுபதுஎனும்
சூத்திரமாய் பாடியருள் தோற்றமும் - மாத்திரமோ

119.உன்னோடு அவர் விளையாட்டு ஒன்றோ?
வடமதுரைக்கு
அந்நேரம் உன்பிறகே யார்வந்தார்? - மன்னவன்மேல்

120.காரியார் நாரியார் கண்டகவி யைப்பகிர
வாரிஇலாக் கானகத்தில் வந்தவர்ஆர் - நாரிளொடும்

121.போற்றிஉறும் பத்திரற்காப் போந்து கிழஉருவில்
தோற்றி விறகுசுமந்தவர்ஆர்? - தேற்றிஅவற்கு

122.ஈயஅரிய பொற்பலகை இட்டவர்ஆர்? மற்றுஅவன்தன்
நேயமனைவிக்கு எதிரா(ய்) நேர்ந்தவளைப் - போய்
அவையில்

123.தள்ளி, இசை தாபிக்கத் தக்கவர்ஆர்? தென்மதுரைக்கு
உள்இருந்த சொக்கர்உனக்குள் அன்றோ - எள்ளி

124.வடமொழியில் வேத வசனமே ஈசர்
திடமொழியாம் என்பார் சிலரே - அடரும்

125.பரசமய கோளரியாய்ப் பாண்டிநாடு எங்கும்
அரசமய(ம்) நீநிறுத்தும் அந்நாள் - விரசுநீ

126.ஆதிக்கண் வையையில்வேத ஆகமத்தைத் தாபித்தாய்
சோதிக்கின் ஏடகமே சொல்லாதோ - வேதத்தேவு

127.ஆதவன்அங்கு அண்டாது அடைத்தகத வம்திறந்தாய்
வேதவனம் கண்டால் விளம்பாதோ-வேதம்

128.அமிழ்தினும் மிக்குஎன்னும் முனிக்கு அன்பர்உனைச்
சொன்னார்
தமிழ்முனிஎன் னும்பேர்தா ராதோ? - தமிழால்

129.அறம்பொருள் இன்பம்வீடு ஆரணர்சொன் னார்அத்
திறம்பரமர் வாக்கேசெப் பாதோ - மறந்திடல்இல்

130.கற்புஅலகை ஓதுமறை காணார்கீழ் நிற்கவு(ம்)நீ
பொற்பலகை மேல்இருந்தாய், போதாயோ? - தற்பரரோடு

131.எண்இறந்த வாசிஅழைத்திட்டாய் சதுர்வேதப்
பண்நிறைந்த வாசி பகராதோ - அண்ணலார்

132.தென்பால் உகந்துஆடும் செய்திஎல்லாம் உன்இடத்தில்
அன்பால்என்று அப்பாலும் ஆர்அறியார்? - உன்பேர்

133.பழியார் திசைச்சொல்லார் பன்னார் திருவாய்
மொழியார் குழறி மொழிவார்! - அழியா

134.உருவால்அ வாய்இருக்கும் ஓதஅரிய முத்தித்
திருவால வாய்இருக்கும் செல்வர் - ஒருமால்

135.வடமதுரை ஏறுமுன்னே வந்தவடிவு என்னத்
தடமதுரை மீன்உயர்த்த படர் தீர்க்கும்

136.சத்திபுரத்து ஓர்பால் தழைத்துமகிழ்ந்து ஓர்சீவன்
முத்திபுரத்து ஓர்பால் முளைத்து எழுந்தோர் -அத்திசைபோல்

137.ஆங்குஓர் இருநான்கு அயரா வதம்சுமக்கும்
பூங்கோயிற் குள்உறைந்த புண்ணியனார் - பாங்காம்

138.இடம் பவனம் ஈதுஆக இந்திரன்வந்து ஏத்தும்
கடம்பவனம் மீதில்உறை காந்தர் - அடும்போர்

139.அலகுஅம்பு அரிக்கும் அரியார் முடிவேய்ந்து
உலகம் பரிக்கும்முறை உள்ளார் - பலநாளும்

140.நின்றவூர்ப் பூசலார் நீடுஇரவு எலாம் நினைந்து
குன்றுபோலே சமைத்த கோயிலும் - நன்றிதரும்

141.தாயான கங்கைமுடி தான்குளிரக் கண்ணப்பர்
வாயால் உமிழ்ந்ததிரு மஞ்சனமும் - தூயமழைத்

142.துன்புஆர் திருக்குறிப்புத் தொண்டர் துணித்துறையில்
வன்பாய் அளித்தபரி வட்டமும் - இன்பா(ய்)த்

143.தணிவுஅரிய மானக்கஞ் சாறனார் சாத்தும்
மணிமுடிசூழ் பஞ்ச வடியும் - அணிவிடையார்

144.காமன்பால் முன்சேந்த கண்போல மூர்த்தியார்
தாம்அன்பால் முன்சேர்த்த சந்தனமும் - பூமன்போல்

145.காக்கும் அரிபுனைந்த கண்மலரும் காதலொடு
சாக்கியர்தாம் சாத்தியபூந் தண்மலரும் - போக்கியமா

146.ஆக்கிய மாறன் அமுதும் சிறுத்தொண்டர்
மாக்கறியும் தாயர்திரு மாவடுவும் - நீக்கஅரிய

147.காரார் இரவில் கணம்புல்லர் தம்முடிமேல்
சீர்ஆக ஏற்றியசெந் தீபமும் - ஆரால்

148.அமைத்து வணங்கல்உறும் அங்கணர்க்குப் பூசை
சமைத்து வண்ங்கத் தருமோ? - உமைக்குஅன்பர்

149.அர்சனைபாட் டேயாம்என்று ஆரூரர்க்கு ஆதியிலே
சொற்றமிழ் பாடுகஎனச் சொன்னமையால் - சொற்படியே

150.செய்தாய்நால் வேதம் திகைத்துஓதுங்கப் பித்தன்என்று
வைய்தாய்நீ! வைதாலும் வாழ்த்தாமே - மெய்தான்

151.இருந்தமிழே உன்னால் இருந்தேன்; இமையோர்
விருந்துஅமிழ்தம் என்றாலும் வேண்டேன்-
வருந்தினன்மால்

152.வெல்ஆனை தின்ற விளங்கனி ஆனேன்; விரகக்
கல்ஆனை தின்ற கரும்புஆனேன் - நல்வரைத்

153.தேடுநிழல் சிந்தனையில் தேம்பினேன்; வெம்பனியால்
வாடிய செந்தா மரைஒத்தேன் - ஓடம் மிசைக்

154.கொள்ளம்பூதூர் வெள்ளக் கொள்ளைகடந் தாய்,என்மால்
வெள்ளம் கடத்திவிட வேண்டாவோ? - தள்என்று

155.மாறுஇட்ட சாக்கியரை வன்கழு ஏறச் செய்தாய்
சீறுஇட்ட வேளைஅது செய்யாயோ? - நீறுஇட்டே

156.அங்கு அரும்பின் கூன்ஒழித்தாய் அன்றுவழு திக்கு;மதன்
செம்கரும்பின் கூன்ஒழிய செய்யாயோ? - அங்கம்உறு

157வெப்புநோய் தீர்த்தாய்அவ் வேந்தனுக்கு;என் வெவ்விரக
வெப்புநோய் தீர்க்க விரும்பாயோ-தப்புஅலவே

158.சாக்கியர் இட்டநஞ்சு தன்னைஅமு தாக்கினை;இன்று
ஆக்கிய நஞ்சைஅமுது ஆக்காயோ-நீக்கஅரிய

159.வெம்தீக்குள் ளேகிடந்தும் வேவாய்என் பார்,காமச்
செந்தீ சுடாதுஇருக்கச் செய்யாயோ? - வந்து கொங்கில்

160.அப்பனியால் வாடாதே யார்க்கும் துயர்ஒழித்தாய்
இப் பனியால் வாடாது இரங்காயோ - அப்பரை

161.மைக் கடல்கொல் லாதபடி வன்கல் மிதப்பித்தாய்
அக்கடல்கொல் லாமல்உறவு ஆக்காயோ - மிக்கு
உயர்ந்த

162.மன்றில் பனைவடிவம் மாற்றினாய் அப்பனைமேல்
அன்றில்புள் வேறொருபுள் ஆக்காயோ - தொன்று
தொட்டுத்

163.தென்பொதியில் சாந்தினொடு தென்றல்உற வாய்வந்தாய்
அன்புஉற என்னோடும் உறவு ஆக்காயோ - முன்புஇருந்து

164.பாடும்இசை எல்லாம்உன் பாவையராச் சேர்த்தாய் என்
னோடுமுனி யாதுஇருக்க ஓதாயோ-பாடலால்

165.சின்னமொடு காளம் சிவிகைபந்தர் முத்துஅடைந்தாய்
பொன்னே சுடாதுஅணியப் பூட்டாயோ - முன்இறந்தாள்

166.அங்கத்தைப் பூம்பாவை ஆக்கினாய் ஆதலின்என்
அங்கத்தைப் பூம்பாவை ஆக்காயோ - மங்கதான்

167.மாய்ந்தாலும் மாமுதலை வாய்பிள்ளை யைப் படைத்தாய்
மாய்ந்தாலும் பின்படைக்க வல்லையே - ஏய்ந்தஉரை

168.செய்தாள்என்று என்சொல் செவிஓர்ந்து செல்வாய்இங்கு
எய்தாமல் அங்குஇருக்க எண்ணாதே - பொய்தீரத்

169.தேசுஇவரும் சொக்கருக்கே சென்றுஇருந்து ஆங்கு அவரைப்
பேசிவரும் தூது பிறிதுஉண்டோ - நேசமொடு

170.தைவரினும் காட்டத் தகாதாரைத் தாதையர்க்குக்
கைவிரலால் காட்டிஅருள் காளையும் - தெய்வவெள்ளிப்

171.பூதர வானவரைப் போற்றமுயன்று ஐயாற்றில்
ஆதரவாய்க் கண்ட அரசரும் - நாதர்

172.அளந்துஅருள்செம் பொன்னைமணி ஆற்றில்இட்டு ஆரூர்
குளந்தனிலே தேடிஅருள் கோவும் - வளம்திகழும்

173.காளத்தி யில்வந்தகாட்சிகயி லாயத்து
நீளத்தான் சொற்றவனும் நீஅன்றோ - கேள்அப்பால்

174.அம்மைதமக்கு இல்லாதார், அம்மைதாமாய் இருந்தார்,
அம்மைஎன்று முன்உரைத்த அம்மையாய்த் - தம் எதிரே

175.வெள்ஆனை மேல்கொண்ட வேந்தர் வரவிடுத்த
வெள்ஆனை மேல்கொண்ட வித்தகராய்த் - தள்ளாது

176.விஞ்சுஉவரால் வண்ணானை வெண்ணீற்றர்
என்றுபணிந்து
அஞ்சலி செய்து ஆட்செய்த அன்பராய்ச் - சஞ்சரியாத்

177.தென்கையி லாயவரை செல்வர்பால் சென்றாயே
உன்கையில் ஆகாதது ஒன்றுஉண்டோ - என்கையால்

178.ஆயும் அவள்பாகத்து அன்பரும் உக்கிரராம்
சேயும் புரந்துஇருக்கும் தென்மதுரை - வாய்இனிய

179.செவ்வழியே செல்வாய்நீ செல் வழியில் நல்வழிதான்
எவ்வழி என்றால், இயம்பக்கேள் - எவ்வழியும்

180.வெல்வாய் உனைநினைந்து வேயுறுதோளிஎன்று
செல்வார்தம் காரியம்சித் திக்குமே - செல்வாய்

181.தடைஉண்டோ ஐயாறு தன்னிலே பொன்னி
இடைவிலங்கச் சென்றதுஅறி யேனோ - இடையிலே

182.பாலைநிலம் நெய்தலாய் பண்ணினாய் இன்னும்அதைச்
சோலைநிலம் ஆக்குவை நான்சொல்லுவது என் - மேலானார்

183.கூறும் பொதிசோறு கொண்டு வரின்உனக்கு
வேறும் பொதிசோறு வேண்டுமோ - வீறாகக்

184.கற்பார் பொருள்காணார் காசுபணம் காணில்உனை
விற்பார் அவர்பால்நீ மேவாதே - கற்றாரை

185.எள்ளிடுவார் சொற்பொருள்கேட்டு இன்புஉறார்
நாய்போலச்
சள்ளிடுவார் தம்அருகே சாராதே - தெள்ளுதமிழ்ப்

186.பாயிரம்முன் சொன்ன படிபடியா மல்குழறி
ஆயிரமும் சொல்வார்பால் அண்டாதே - ஆய்தருநூல்

187.ஓதிஅறியாத ஒண்பே தையருடனே
நீதி முறையா நிகழ்த்துநூல் - பேதைமையாம்

188.காணாதான் காட்டுவான் தான்காணான் கண்எதிரே
நாணாது இராதே நவிலாதே - வீணாக

189.ஆற்றின் அளவறிந்து கல்லாது அவைஅஞ்சும்
கூற்றினர்பால் ஏகாதே, கூடாதே - போற்றாரை

190.வேண்டாதே, கேடில் விழுச்செல்வம் கல்விஎன்று
பூண்டாய்நீ தானே பொருள்அன்றோ - ஆண்ட

191.வலவா, நலஆ டுதுறையில் உன்போல்
உலவாக் கிழிபெற்றார் உண்டோ - நல் விருப்புஅது

192.ஆக்கவரு செங்கலைப்பொன் ஆக்கினாய்,மண்முழுதும்
மாகனகம் ஆக்கவிட வல்லையே - நோக்குபுகார்

193.பாடியதோர் வஞ்சிநெடும் பாட்டால் பதினாறு
கோடிபொன் கொண்டதுநின் கொற்றமே - தேடிஅருள்

194.நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்டதிரு கண்டாயே - கல்லார்பால்

195.ஏகாதே அன்புஇலார் இந்திரன்போல் வாழ்ந்தாலும்
போகாதே அங்கே புசியாதே - மாகவிருர்

196.தாம்இன் புறுவது உலகு இன்புறக் கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்என்னும் - மாமகிமை

197.சேர்ந்ததுஉன்பால் அன்றோ திருப்பாற் கடல்அமுதம்
ஆர்ந்தவர்க்குஅல் லாதுபசி ஆறுமோ - சேர்ந்துஉனை

198.தம்பாதார வீதி நணுகாதே நல்லார்கள்
தம்பால் இருந்து தரித்துஏகி - வம்புஆகப்

199.பின்போ(ய்) யமன்ஓடப் பேர்த்துஓடும் வையமிலே
முன்போய் எதிர்போய் முழுகியே - அன்போடே

200.தாழ்ந்துநீள் சத்தந் தளைக்கற்றார் உள்ளம்போல்
ஆழ்ந்த அகழி அகன்றுபோய்ச் - சூழ்ந்து உலகில்

201.மேன்மேல் உயர்ந்துஓங்கு வேதம்போல் மேலாக
வான்மேல் உயர்ந்த மதில்கடந்து - போனால்

202.மிருதிபுரா ணம்கலைபோல் வேறுவேறு ஆக
வருதிரு வீதிசூழ் வந்தே - இருவினையை

203.மோதும் சிவஆகமம்போல் முத்திக்கு வித்தாக
ஓதும் திருக்கோயில் உள்புகுந்து - நீ தென்பால்

204.முன்னே வணங்கி முறையின் அபி டேகமுனி
தன்நேயம் போல்ஆம் தளஇசையும் - தன்வடைந்து

205. தேறும் படிவர் சிவலோகம் சேர்ந்திருக்க
ஏறும் படிநிறுத்தும் ஏணிபோல் - வீறு உயர்ந்த

206. கோ மேவு கோபுரமும் கூடலின்மேல் முன்ஒருநாள்
மாமேகம் சேர்ந்ததுபோல் மண்டபமும்-பூமேவும்

207. மட்டுஅளையும் வண்டுளைப்போல் மாளிகைப்
பத்திஅறைக்
கட்டளையும் கண்டு களிகூர்ந்தே - இட்டமணிச்

208. சிங்க ஆதனத்தில் சிறந்ததிரு வோலக்கம்
எங்குஆ கிலும்ஒரு வாக்கு எய்துமோ - பைங்கழல்கும்

209. தேம்கமலத் தேக தெரிசனம் செய்தவர்க்கே
பூங்கமலக் கண்கொடுத்த புத்தேளும் - ஓங்கு அமல

210. மைதில் அடியில் வணங்காத் தலைஒன்றைக்
கையில் அளித்த கடவுளும் - மெய்இழந்த

211. மரணம் தனக்கு வருத்தகடம்ப அடவிக்கு
மரணந் தனைவருத்த வானவனும் - தேன்அங்கு

212. அணிமலர்த்தாள் நெஞ்சுகண்டு அழுந்தி அழுந்தாதே
மணிமுடிகள் நீக்கி வணங்க - கணநாதர்

213. முதுமுனி யோடுசினம் உற்றபகை செற்றமுரண்
போத முனிவர் புடை சூழத் - நீதுஇல்

214. அரிய நிசைப்பால் அந்தம்முதல் தாங்கித்
தெரிசனக்கண் பார்த்துலவல் செய்யப் - பாவியே

215.முன்இருவர் எண்மரொடு மெய்த்த பதினொருவர்
பன்னிருவர் நின்று பணிசெய்ய - முன்னே

216.நதிகள்ளனக் கண்டு நந்திபிரம்பு ஓங்க
உதகஇரு பாலின் ஒதுங்க - பதினெண்

217.குலத்தேவர் தம்மகுட கோடிபதி னெட்டு
நிலத்தோர் முடியால் நெரிய - நிலத்தே

218.செருக்கும் சினேகம் உற்ற தேவி யுடனே
இருக்கும் சினகரத்துள் எய்திப் - பொருக்கெனப்போய்

219.எந்தாய் என்று ஏத்தும் இடைக்காடன் பின்போன
செந்தா மரைபோல் திருத்தாளும் - வந்துமனம்

220.தேறிக் கழுத்துஅரியத் தென்பாண்டி நாடனுக்கு
மாறித் திரும்பு மணிக்குறங்கும் - சீறிப்

221.பணிக்கற்கு மாறாப் படைஉடைவாள் சேர்த்து
மணிக் கச்சுஉடுத்த மருங்கும் - துணிக்கு அமையாத்

222.தொண்டுபடு வந்தி சொரிந்திடும்பிட்டு அள்ளிஅள்ளி
உண்டுபசி தீர்ந்த உதரமும் - அண்டும்ஒரு

223.தாய்முலைப்பால் உண்டுஅறியாத் தாம்பன்றிக்
குட்டிகளின்
வாய்முலைப்பால் ஊட்டியபூண மார்பமும் - தூயமுடி

224.ஆணிக் கனகத்து அழுத்த வழுதிக்கு
மாணிக்கம் விற்ற மலர்க்கையும் - காணிக்கப்

225.பூம்படலை ஆத்திப் புனைமலரைப் பூணாமல்
வேம்புஅலரைப் பூண்ட வியன்புயமும் - ஓம்புகொடி

226.வாதில் கரிக்குருவி வாழ்தற்கு உபதேசம்
காதில் புகன்ற கனிவாயும் - தீதுஇல் சொல்

227.வாயிலா நீஇருந்து வாழும் படிஉனக்குக்
கோயிலா தந்த குழைக்காதும் - போய்வணிகப்

228.பெண்நீராள் கண்ணீர் பெருகத் தழுவித்தம்
கண்ணீரால் ஆற்றிஅருள் கண்களும் - தெள்நீரார்

229.பண்சுமந்த பாட்டினுக்கும் பாவைதந்த பிட்டினுக்கும்
மண்சுமந்த சோதிமணிமுடியும் - கண்சுமந்து

230.கண்டுகளி கூர்ந்து கசிந்துகசிந்து உள்உருகித்
தொண்டுசெய்து தாள்முடிமேல் சூடியே - மண்டும்

231.உடுக்குலம்தம் கோக்குலம்என்று உற்றுஅறிந்தால் என்ன
அடுக்குஇலங்கு தீபம் எதிர்ஆகக் - கடுத்திடேல்

232.வெம்கதிர்உண்டு உன்குலத்து வெண்மதிஉண்டு
என்னல்போல்
தங்க ஆரம்தீபம் தாம்அசையத் - துங்கவிடை.

233.ஏங்கும்[illegible] மீன்உயர்த்தின் எங்குஇருப்பேன் என்பதுபோல்
ஆங்கு இ[illegible] தீபம் அழன்றுஆட[illegible] - நீங்கா

234.அருள்தாம் [illegible]கத்து[illegible]உரு ஆனார்க்கு உவந்தே
புருடா ம்ருகத்[illegible]ம் போற்ற - மருவார்

235.வருகுலத்தார் பானு வரல் நடுக்குஉற்று என்ன
அருகுஉலவும் தட்டது அசைய - இருசுடர்க்கும்

236.சொக்கர்உனைத் தானே சுடர்என்று காட்டுதல்போல்
அக்கர ஆலத்திஒளி யாய்விளங்கத் - தக்கவளோடு

237.எற்கும் பயந்துஒளித்தார் என்றுகங்கை தேடுதல்போல்
பொன்கும்ப தீபம்எதிர் போய்வளையச்-சொற்கு உருகும்

238.அற்புஊர்அத் தொண்டர்க்கு அருள்முத்தி ஈதுஎனல்போல்
கற்பூரத் தட்டில் கனல் வாய்ப்பப் - பொற்புஆக

239.நம்குலத்தும் வந்துஉதித்தார் நாதர்என்று பானுமகிழ்ந்து
அங்குஉறல்போல் கண்ணாடி அங்கண்உற - இங்குஅரசர்

240.எம்குலத்தார் ஆயினார் என்றுபிறை தோற்றுதல்போல்
துங்கமுடி மேல்குடைவெண் சோதிவிடப் - பொங்கிஎழும்

241.முந்துகடல் வெண்திரைகள் முன்னே மாமிக்காக
வந்தனபோல் வெண்சா மரைஇரட்ட - விந்தைசெயும்

242.ஆடுஅரவச் சித்தர்இவர் ஆதலினால் ஆலவட்டம்
நீடுஅரவம் போலஎதிர் நின்றுஆட - நாடுஅகலா

243.வாலநறும் தென்றல் நம்மன்னர்என்று காண்பதுபோல்
கோலவிசிறி குளிர்ந்துஅணுகக் - காலைத்

244.திருஅனந்தல் முன்ஆகச் சேவிக்கும் காலத்து
உருஅனந்த தேவ ருடனே-மருவிஎதிர்

245.போற்றுவாய் நீயும் புரோகிதரை முன்அனுப்பித்
தோற்றரவு செய்து துதித்தபின் -ஆற்றல்

246.அரிய சிவஆக மத்தோர் ஆதிசைவர் தம்பால்
உரிய படையா ஒதுங்கி - அருமையுடன்

247.மூவர் கவியே முதலாம் கவிஐந்தும்
மூவராய் நின்றார்தம் முன்ஓதி - ஓவாதே

248.சீபாதம் எண்ணாத தீயவினை பாவிசெய்த
மாபாதகம் தீர்த்த மாமருந்தை - தீபமணிப்

249.பைந்நாகம் சூழ்மதுரைப் பாண்டியனே பாரம்மணிக்
கைந்நாகம் சூழ்கோயில் கண்மணியே - மன்ஆக

250.மைக்கண் கரும்பை மருவிப் பிரியாத
முக்கண் கனியே முழுமுதலே - மிக்கபுனல்

251.கங்கா நதிக்குஇறையே; கன்னித் துறைக்குஅரசே;
சிங்கா தனத்துரையே! செல்வமே - எம்கோவே!

252.நாடவிளை யாடிவந்த நற்பாவை போல்அடியார்
கூடவிளை யாடிவந்த கோமானே! - தேடஅரிய

253.சிந்தைமகிழ்ந்து அன்புடையார் தேடியநாள் ஓடிஎதிர்
வந்தவிளை யாட்டுஇனிமேல் வாராதோ? வந்து அருளால்

254.பாவும் புகழ்சேர் பழிக்குஅஞ்சி என்றுஉலகில்
மேவும் பெயர்இனிமேல் வேண்டாவோ? - ஆவலினால்

255.புக்குவந்தார் தம்மேல் பொடிபோட்டு உளமயக்கில்
சொக்கலிங்கம் என்றுஎவரும் சொல்லாரோ?-இக்கு
அணைத்த

256.அம்கைவேள் தானே அரசுஆள வும்சிறிய
மங்கைதனைக் கோட்டிகொளல் வல்லமையோ? -
கங்கையெலாம்

257.நல்ல மைக்கண் ஊடுவர நல்குதியே நங்கை எலாம்
வல்லசித்தர் என்றுஅழைக்க மாட்டாளே - நல்லவர்போல்

258.மைக்குவளைக் கண்ணி வளைகவர்ந்து மங்கையர்தம்
கைக்கு வளை விற்கக் கணக்குஉண்டோ? - திக்குவளை

259.தோள்தாரும் வேம்பாய்த் தொடர்ந்துதொடர்ந் தேஒருதார்
கேட்டாரும் வேம்புஆகக் கேட்டோமே! - நாட்டம்உற

260.வேளை எரித்தாய்க்கு இயல்போ? மின்னார் கலைகவர்தல்
காளைஇடைஇருந்து கற்றதோ? - மீளாது

261.சென்றுஇலகு நாரைஅன்று சென்றசிவ லோகத்தே
இன்றுஎனைஅங்கு எய்தவிடல் ஆகாதோ? - அன்றிஅழல்

262.குன்றே! விருத்த குமாரர் இளம்பாலர்
என்றேஓர் பெண்வீட்டு இருக்கலாம் - சென்றுஒருநாள்

263.பொன்அனையாள் வீடும் புகுந்து இருக்க லாம்;
எனின்என்
பொன்அனையாள் வீடும் பொருந்தாதோ?-என்னும்மொழி

264.எல்லாம் திருச்செவியில் ஏறும்படி உரைக்க
வல்லாய்; உன் போல்எவர்க்கு வாய்க்குமே! - நல்லாள்

265.கருணைவிழி யாள்அங் கயற்கண்ணி தன்னோடு
அருள்புரிய வாழ்ந்திருக்கும் ஐயர், - திருமதுரை

266.தானே சிவராச தானிஎன்று வீற்றிருந்தால்
தேனே நம் பாக்கியத்தின் செய்தியே - ஆனமையால்

267.அந்தரலோ கத்தின்மே லானதிரு ஆலவாய்ச்
சுந்தர மீனவன்நின் சொற்படியே - வந்து,

268.துறவாதே சேர்ந்து, சுகஆனந்தம் நல்க,
மறவாதே, தூதுசொல்லி வா.



மதுரைச் சொக்கநாதர்

# தமிழ்விடு தூது

## பொழிப்புரை

மதுரையில் கோயில் கொண்டுள்ள சொக்கநாதர் மேல் காதல்கொண்ட ஒரு தலைவியின் கூற்றாக இந்நூல் அமைந்து உள்ளது. தமிழ்மொழியை ஓர் உயிர் உள்ள பொருளாக அழைத்துக் கூறியதாகக் கொள்ளலாம். தமிழை மதுரைச் சொக்கநாதரிடத்துத் தூது விடுக்கின்றாள் தலைவி. 'தமிழ்மொழியே!' எனத் தலைவி அழைத்துச் சொல்லுவதாகத் தொடங்குக.

### எல்லோரும் தமிழாய் இருத்தல்

16. என் அடிகளே!

1-16 சீர்கொண்ட கூடல் சிவராச தானிபுரத்து...

- பொன்அடிகளே புகலாப் போற்றினேன்.

தமிழ் மொழியே!

சிறப்புப் பொருந்திய கூடல் (மதுரை) என்று அழைக்கப்படுகின்ற சிவராசதானியைப் பாதுகாத்து, அழகு பொருந்திய தமிழ்ச் சங்கத்தில் நாற்பத்து ஒன்பது புலவர்களுள் ஒருவராக இறையனார் என்ற பெயருடன் இருந்த சோமசுந்தரக் கடவுளும்,

எல்லாத் திசைகளிலும் சென்று போரிட்டு வெற்றி பெற்று வாழ்ந்த தமிழ்அரசி என்று பலரும் புகழ்ந்து வணங்கித் துதிக்குமாறு ஒவ்வொரு திசையிலும் சென்று தன் வெற்றியை நிலைநாட்டிய தடாதகைப் பிராட்டியாரும்,

எல்லாரும் விரும்புமாறு திருத்தமாய் அமைந்த சிவஞானத்தைப் பற்றிய வேத ஆகமச் சுவடிகளுள் ஒன்றைக் கையில் எடுத்த கணபதியும்,

உண்மையான அருள் தன்மையால் மதுரையை ஆண்டு ஒரு காலத்தில் மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவர்கள் எதிரில், தமது பாடலை அறிவித்த வேல்படையை உடைய முருகனும்,

வீட்டை விட்டு வெளியில் செல்ல முடியாத மூன்று ஆண்டு நிரம்பிய குழந்தைப் பருவத்திலேயே வடமொழி நூல்களையும் தென்மொழி நூல்களையும் உமையம்மையின் தாய்ப் பால் வழியாக அறிந்த திருஞானசம்பந்தரும்,

மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் நெற்றிக் கண்ணுடன் கூடிய முக்கண்ணர் (சிவபெருமான்) முன்னே - முதலை விழுங்கிய பிள்ளையை உயிருடன் மீட்டுத் தரப் பாடல்களைப் பாடிய சுந்தர மூர்த்தி நாயனாரும்,

விண்ணையும் மண்ணையும் தொடுமாறு உயர்ந்து காணப்பட்ட தன்னுடைய தோற்றத்தின் முடியையும்

அடியையும் பிரமனும் திருமாலும் காணமுடியாத திருவடிகளை (பாதங்களை)த், தேடாமலேயே திருநல்லூரில் (இறைவன் மீது). செய்யுள்பாடி (உறங்கியபோது சிவபெருமான் தம் திருவடிகளைத்) தலையில் முடியாகப் பெற்றுக் கொண்ட திருநாவுக்கரசரும்,

தேன்பொருந்திய தாழம்பூவைச் சூடிக் கொள்ளாதவர் நீளமான பனைஓலைகளைத் தொகுத்துக் குறிப்பு எழுதும் ஓலையாக இறைவன் மறையவராக வந்து திருக்கோவையாரைப் பாடப் பாட ஏட்டில் எழுதிப் பாடிய மாணிக்க வாசகரும்,

தடைபடாமல் குறையாத பெருமை பொருந்திய முத்தமிழ் ஓதி அருளிய அகத்தியரும், தொல்காப்பிய இலக்கணத்தைக் கூறிய பழைய முனிவராகிய தொல்காப்பியரும்,

குறையாத சொல் நிரம்பிய பாடல்களின் நிலையை வைத்தே சிவபெருமானை நோக்கிச் செல்லும் உயிர்களைப் பற்றிப் பன்னிரண்டு நூற்பாக் களால் அனைவரையும் கட்டிய தூய்மை உடையவ ராகிய மெய்கண்ட தேவநாயனாரும்,

இரண்டு கண்களாகிய குற்றமற்ற கவிதைகளைப் பாடிய திருமாளிகைத் தேவர் முதலான முனிவர் அனைவரும்,

உயர்ந்த குலத்தினாலும்,நூல்களினாலும் நீக்க முடியாத உயிர்களைச் சார்ந்துள்ள தீவினைகளை எல்லாம் தாம் இயற்றிய திருமந்திரம் என்னும் நூலினால் நீக்கிய வல்லவராகிய திருமூலநாயனாரும்,

செந்தமிழில் பொய்யான தொண்டு செய்யாத புலவர் என்று புலமைச் சான்றோர்கள் கூறிய உண்மைத் தொண்டர்களாகிய தமிழ்ச்சங்கத்தில் வீற்றிருந்த சங்கப்புலவர்களும்,

சேத்திரத் திருவெண்பா பாடிய ஐயடிகள் காடவர்கோன் என்பவரும், செம்மையாக அயலார் கூறிய சொற்களை எளிதல் தெரிந்துகொள்பவராகிய சேரமான் பெருமாள் நாயனா(கழறிற்று அறிவார்)ரும்,

மற்றவர்கள் எளிதில்பாட முடியாத் தெய்வத் தமிழ் மறையைத் தந்த திருவள்ளுவரும்,

ஆராய்வதற்கு இயலாத (முடியாத) கல்லாத மூடர்களுக்கு எல்லாம் சிங்கம் போன்ற கல்வி கேள்வி அறிவில் சிறந்த எல்லோரும் ஆக நீயே(தமிழ்) இருந்தமையால்,

புகழ்ச்சொற்கள் நிறைந்த உன்னைப் பார்த்து வழிபட்டால் என் பிறவித் துன்பங்கள் எல்லாம் நீங்கும் என்று கருதி உன் பொன் போன்ற திருவடிகளையே பற்றுக்கோடாகத் துதிக்கின்றேன்.

## பிறந்து வளர்தல்

16. ... பன்னியமென் ...
19. வருகுலம் ஓர் ஐந்தாயும் வந்தாய் .......

நெருங்கிய மென்மையான பஞ்சினால் நூற்கப் படாத நூலே! பலரும் இரண்டு விரல்களால் (ஆள்காட்டிவிரல், கட்டைவிரல்) இரண்டு நூலின் முனைகளை இணைக்கப்படாத பாவே! கிழிந்து குறைந்து அழுக்குப்படாத, இயல்பாய் அமைந்த ஆடையே! (கலைகளில் ஒன்றே!)

மிகுந்த நிறத்தில் (சாயத்தில்) தோய்த்து எடுக்கப்படாத செந்தமிழே! சொல் ஏர் உழவராகிய புலவர் உள்ளத்தைக் கருகச் செய்யாது சொல்லை விளைவிக்கும் பாடலே!

நீங்காது மக்கள்குலம் ஒன்றிலும் பிறவாதும் இறவாதும் உயிருக்குள் உயிராய்ப் பிறந்து வருகின்றாய்.

பிறப்பில் குலம் இல்லை என்றாலும் பின்பு ஐந்து குலமாகவும் வளர்ந்தாய்.

## எழுத்துப் பிறப்பு

19. - இருநிலத்தும் ...
22. நாற்பது எழுத்தா நனிபிறந்தாய்.

பெரிய நிலத்திலே முன்புசெய்த புண்ணியம் சேர்ந்த கொப்பூழ்(தொப்புள்) இடத்தே காற்று தங்கி,

சொல் ஆகிய சூல்கொண்டு பொருந்தி, தலை, கழுத்து, மூக்கு, மார்பு ஆகிய நான்கு இடங்களையும் சார்ந்து, உதடு, நாக்கு, பல், மேல்வாய் ஆகிய நான்கின் துணையோடு ஒலி வடிவாகித் தலையில் இருந்து மீண்டு,

அனைவரும் ஏற்குமாறு முதல் எழுத்து முப்பதாகவும் சார்பெழுத்து இருநூற்று நாற்பதாகவும் நன்றாகத் தோன்றினாய்.

## பள்ளியில் கற்கச் செய்தல்

22. .... மேற்படவே .......
27. உனையும் படிப்பிப்பார் உண்டோ?

இவ்வாறு தோன்றியதற்கு மேலாக எண் முதலாகச் சொல்லப்படுகின்ற பன்னிரண்டு பருவங் களையும் வகுத்து இம் மண்ணுலகத்தில் தோன்றிய முதன்மை வாய்ந்தவராகிய புலவர்கள் உன்னை வளர்க்கும் நாளில்,

ஆசிரியர்களுக்குக் கண்மணிபோல் விளங்கிப் பள்ளிக்கூடத்திலே ஏட்டுச் சுவடிகளைத் தூக்கும் பலகையாகிய தொட்டிலில் கிடத்தி, தள்ளிச் சிறுவர் ஒன்று கூடித் தாலாட்டுப் பாடி,

உள்ளிடம் விளங்கும்படி மஞ்சள் பூசிக் குளிப்பாட்டி, மை இட்டு, அறம், பொருள், இன்பம்

என்னும் மூன்று பால்களையும் மிகுதியாக ஊட்ட நீ நன்றாக வளர்ந்தாய்.

மக்களின் குழந்தைகளுக்குப் பத்துப் பருவங்களைத் தோற்றுவித்து (பிள்ளைத்தமிழ் எனும் பிரபந்தம்) நீ வளர்த்தாய். உன்னை யாராகிலும் வளர்க்க முடியுமோ? முடியாதல்லவா!

முதலில் எல்லோரும் நினைக்கும் கல்வி எல்லாம் உன்னிடத்து உள்ளது என்று உணர்ந்து உன்னைப் படிப்பார்கள். உன்னைப் படிப்பிக்குமாறு செய்பவர் உண்டோ? இல்லை.

## கொலு வீற்றிருத்தல்

27. ..... புணைதருதல் ....
34. வாழ்வுஎலாம் கண்டு மகிழ்ந்தாயே.

அழகுபடுத்திப் பாடப்படுகின்ற செய்யுள் சொல்லாகிய இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் நான்கும் செந்தமிழ்ச் சொல்லாகிய பெயர், வினை, இடை, உரி என்ற நான்கு சொல்லும்.

தமிழ்மொழியின் உடலுள் அமைந்த பொருளியலில் அகத்திணை, புறத்திணை இரண்டிலும் வகுத்துக்கூறப்பட்ட எழுவகைத் திணைகளும்,

குற்றமில்லாத எழுத்து முதலாகச் செய்யுளின் உறுப்புகள் எட்டும் அணிவகைகள் முப்பத்து ஐந்தும்

பொருந்தி, வேறுபட்டு நிறைந்த அழகுமிக்க மணமகனாக,

செய்யுள் குலமாகிய அச்செய்யுளில் அமைந்த செப்பல் பண், அகவல்பண், துள்ளல்பண், தூங்கல்பண் ஆகிய நால்வகை ஓசைகள் எல்லாம் பட்டத்து மகளிராகவும்,

உயர்ந்து விளங்கும் உள்ளத்தால் மதிக்கத்தக்க ஐந்து கருவிகளும் பெற்றெடுத்த நூற்று மூன்று இசைப்பண்களும் திருமணம் செய்துகொண்ட மணப்பெண்களாய் ஏற்றுக்கொண்டு,

மதிக்கப்பெற்ற நல்ல ஆதாரமாய்க் கொண்டு (ஆதரவால்) ஒன்பது சுவையாகிய மக்களைப் பெற்றெடுத்தாய்; சிறந்த நல்ல வாழ்க்கையைப் பெற்றாய்.

உன்னோடு பொருந்தி உன்னை விட்டு நீங்காத பண்கள் முதலாகிய பெண்களோடும் பிள்ளை களோடும் நாடகமாகிய பெண்கள் கொலுவில் வீற்றிருக்கப் பெற்றாய்.

உலகத்தில் உள்ளோர் புகழும்படி தாழ்வு இல்லாத பதினெட்டு வருணனைகள் என்னும் நல்வாழ்வு எல்லாம் கண்டு மகிழ்ச்சி அடைந்தாய்.

## செங்கோலாட்சி

34. ... ஆழ .......
41. பாவேந்தே நீ பெரிய பார்வேந்தோ!

ஆழமான நீண்ட அழகுடைய வையை ஆற்றில் என்னுடைய அன்பர் (சிவபெருமான் வையை உடைப்பை அடைத்தபோது) உடல்மீது விழுந்த கொடிய பிரம்படியைச் செங்கோல் போல் ஏற்றுக் கொண்டாய்.

அடங்காத வலிமை உள்ள எம் அரசே! பத்து என்று கூறப்படும் திசைகளுக்கு உள்ளாக உன்னுடைய செங்கோல் ஆட்சி செல்லாத இடமும் உள்ளதோ?

உன்னுடைய ஐம்பத்தாறு தேசங்களிலே தமிழ் வழங்கும் நாட்டைச் சார்ந்த பகுதிகளில் பேசப்படும் திசைச்சொல் பதினேழும் நீ வைத்த குற்றமற்ற குறுநில மன்னர்களோ?

அலைவீசுகின்ற மேற்குக் கடலும், கிழக்குக் கடலும், தலைமை வாய்ந்த தென்குமரி முனையும், வடவேங்கடமலையும் ஆகிய நான்கு பகுதியையும் உனக்கு எல்லையாக வகுத்துக்கொண்டாய்.

இந்நான்கு எல்லைக்குள் நடுவே இருந்த தென்பாண்டி முதல் புனல்நாடு இறுதியாகப் பன்னிரண்டும் அத் தமிழ்நாட்டின் பகுதிக்குட்பட்ட நாடுகளோ?

அரசே! அந்நாடுகளுள் வையை ஆற்றின் வடக்கும் கருவூரின் கிழக்கும் மருத ஆற்றின் தெற்கும் மருவூரின் மேற்கும் ஆகிய நான்கு எல்லைக்குள் அடங்கிய நடுஇடம் நீ வாழும் அரண்மனையோ?

செம்மையான புகழ்மிக்க சேர,சோழ,பாண்டியர் என்னும் மூன்று அரசரையும் ஊர்தியாய் விண், மண், பாதலம் என்ற மூன்று உலகங்களிலும் சுற்றி வந்த பாட்டு வேந்தனே! நீ, பெரிய இந்நிலவுலக வேந்தனோ? நான் அறியேன்.

## புரோகிதர், தோழர், படை

41. - காவேந்து ...
45. சீர்ப்பாவே உன்னுடைய சேனைகளோ?

புண்ணியனே! கற்பகத் தருவை ஏந்தியுள்ள விண்ணுலகத்தில் உள்ள தேவர்களும் காண்பதற்கு இயலாத இருக்கு, எசூர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும் காமிகம் முதலாக வாதுளம் இறுதியாக உள்ள இருபத்தெட்டு ஆகமங்களும் உனக்குப் புரோகிதர்களோ?

சொல்லுக்கு அரசே! அளவற்ற நல்ல பெரிய காப்பியங்களும் நாடகங்களும் அலங்காரங்களும் உன்னுடைய தோழர்களோ?

பழைமையான இவ்வுலகத்தில் சார்ந்தவர்களைப் பாதுகாக்கும் அரசனே! நல்ல சமய நூல்கள் எல்லாம்

உன்னுடைய மண்ணைப் பாதுகாக்கும் படைத்தலைவர்களோ?

சிறப்புப் பொருந்திய பாவே! வீரர்கள் அனைவரும் நடுங்கத்தக்க போர் வரலாறுகளைக் கூறும் பாரதமும் பதினெட்டுப் புராணங்களும் உன்னுடைய படைகளோ?

## சங்கப் பலகையில் இருத்தல்

45. ........... - பார்ப்பார்கள்
49. வர சங்கம் மீதிருந்து வாழ்ந்தே.

உன்னைப் பார்ப்பவர்கள் எல்லாம் எழுத்து வருத்தனம் (எழுத்துக்களின் வழி வருவோன்) என்னும் சொல்லணிக் கவியில் (சித்திரக்கவி) நிற்பவன் என்று கூறலாம் என்பார்கள்.

இந்நிலவுலகச் சக்கரவர்த்தியும் (சக்கரத்தில் அமைக்கும் பாடல்களாகிய சித்திரக் கவிகளில் நிற்பவன்) நீ அல்லவா?

சொல்லணியில் உள்ள சக்கரம் முதலான சித்திரப்பாடல்களில் வைத்த முறைப்படி ஏந்தப்பட்டு நெடிய தேரில் ஏறிச் சுழிகுளம் நீந்தி, கூடம் உள்ள சதுக்கத்தில் அமர்ந்து,

மணம் வீசும் மாலை மாற்றை அணிந்து சுற்றியுள்ள நால்வகைப் படைகளும் விளங்க,

நலமாகப் பேரிகை முழங்க, முடியணிந்த அரசர்கள் யாவரும் சூழ்ந்துவர, மேன்மைபொருந்திய சங்கப்பலகை மீது இருந்து வாழ்ந்து,

## கவிதை என்னும் அரசன்

49. - அருள்வடிவாய் ...........
62. சரியாரும் உண்டோ தமிழே.

சிவபெருமானுடைய திருவருளின் வடிவமாய் உயர்ந்த புகழ்மிக்க தேவார மூவர்(திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர்) பாடிய தேவாரத் திருப்பதிகங்களும் அப்பதிகங்களை விளக்கி உரைத்த திருவாதவூரில் தோன்றி நம்மை ஆட்கொண்ட மாணிக்கவாசகரின் திருவாசகமும்,

உயர்ந்த அம் மாணிக்க வாசகர் கூறியபடி சிவபெருமான் எழுதிய திருக்கோவையார் என்னும் நூலும் குற்றமில்லாத காரைக்கால் அம்மையார் சிறந்த சொல் அமைத்துப்பாடிய இரட்டைமணி மாலையும்,

தெளிவு பொருந்த எல்லார்க்கும் பற்றாகிய தொல்காப்பியம் முதலான பல இலக்கண நூல்களில் உள்ள நூற்பாக்களும் அந்த இலக்கண நூல்களை எல்லாம் கற்றறிந்த புலவர்கள் பாடிக்கொடுத்த சீவகசிந்தம ணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் ஐம்பெருங் காப்பியங்களும

அரசர்களுக்கு உரியனவாகக் கருதப்பட்ட வருணனை அமைந்த நாடு, நகரம் முதலிய பதினெட்டு வகைச் சிறப்புகளும் தெரியும்படி பாடப்பட்ட பெருமை மிகுந்த பெருங்காப்பியங்களும்,

தில்லையம்பலத்தை அடைந்து இன்பம் பெற்ற சேரமான் பெருமாள் நாயனார் (பொன் வண்ணத்து அந்தாதியைப்பாடி) அரங்கேற்றம் செய்தபொழுது தில்லையம்பலத்தில் எழுந்தருளிய கூத்தபிரான் கேட்டு மகிழ்ச்சி அடைந்து அன்பு மிகக் கொண்ட பொன்வண்ணத்து அந்தாதியும்,

அரங்கேற்றம் செய்வதற்கு முன்னமேயே சேரமான் பெருமாள் நாயனார் பாடிய பெருமை பொருந்திய தமிழாகிய மும்மணி மாலையும்,

பட்டினத்தார் பாமாலையாகக் கோத்துச் சிவபெருமானுக்கு அணிவித்த திருவாரூர் மும்மணிக் கோவையும்,

அறிவில் முதிர்ந்தவர்கள் பாடி அருளிய பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும் (பதினெண் மேற்கணக்கு நூல்கள்), கெடுதல் இல்லாத அறவுரைகளைக் கூறும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும்,

ஆடகப் பொன்போல் உயர்ந்த பெரிய மலையை ஒத்த திருவாமாத்தூரில் எழுந்தருளிய சிவபெருமான் மீது

இரட்டைப் புலவர்கள் கற்பனையால் பாடிய (விழுப்புரம்) திருவாமாத்தூர்க் கலம்பகமும்,

முன்னாலே செல்லும் தூசிப் படையின் துணையோடு சென்று ஆடலால் போர்புரிந்து கலிங்க நாட்டை அழித்து ஆயிரம் யானைகளைக் கொன்று வெற்றிகண்ட புலவர்களால் எளிதில் பாடமுடியாத கலிங்கத்துப் பரணியும்,

காவிரிப்பூம்பட்டினத்து மக்கள் தலைவனாகிய இராசராச சோழன் எதிரில் அமர்ந்து ஒரு கண்ணிக்கு ஓர் ஆயிரம் பொன் பரிசாகக் கொடுக்க அதைப் பெற்றுக்கொண்டு புலவர் ஒட்டக் கூத்தர் பாடிய இராசராசசோழன் உலாவும்,

அனைவரும் துதிக்கும் வண்ணம் அக் கூத்தன் பாடிய குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ் என்னும் நூலும் உன்னால் பாதுகாக்கப்படும் நிலைத்த (அழியாத) **வெள்ளம்** என்ற பேரெண்ணின் எண்ணிக்கையைக் காட்டிலும் மிகுதியான சான்றோர்கள் மெய்காப்பாளர்களாக இருந்து பாதுகாக்க

மனத்துள் வீரம் நிறையப் பெற்று தீவினைகள் நீங்க முதன்மையுள்ள நல்வினைகளைச் செய்துவரும் கவிதை என்னும் அரசனே!

தமிழே! இவ்வுலகில் சிங்காதனம் (அரிந்த பனை ஒலையாகிய எழுத்துகள் அமரும் சிங்காதனம்)

உனக்கே ஆனால், உனக்குச் சமமானவர் இவ்வுலகில் வேறு யாராகிலும் உள்ளனரோ?

## களை நீங்கி வளர்தல்

62. - விரிவார் ....
68. வளர்ந்தனை .....

விரிந்து நிறைந்து விளங்கிய நான்கு பாக்களும் எல்லையாக, புகழப்படும் பாக்களின் பாவினங்கள் மடைப்போக்காகவும் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கு கரணங்களையும் ஏராகப் பூட்டித் தொகுத்து நெருங்கி நின்று,

வைதருப்பம், கௌடம், பாஞ்சாலம், மரகதம் என்ற நான்கு நல்ல நெறிகளையும் விதையாக நன்கு விதைத்து அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கு பொருளையும் மேற்கொண்டு விளைவித்து மகசூல் பெறச் செய்விக்கும் நாளில்,

அரசர்களுள் பாக்கள் பாடுவதையே தன் தொழிலாகக் கொண்ட அதிவீரராமபாண்டியன், வில்லிபுத்தூரார், ஒட்டக்கூத்தர் ஆகிய இம்மூவரும் பல நூல்களைக் கற்று ஆராயாது, புலவர் எனப் பேர் சொல்லிக்கொண்டு சான்றோர் அவையில் சென்று பங்கு பெறும் கீழ்மக்களைத் தலையில் குட்டியும் செவிகளை அறுத்தும் தலைகளை ஒன்றாகக் கட்டி அறுத்தும் போலிப் புலவர்களாகிய களைகளைப் பறிக்க, நீ உயர்வாக அடிப்பக்கம் பருத்து வளர்ந்தாய்.

## வேண்டுகோள் விடுத்தல்

68. ..... பால் முந்திரிகை வாழைக் கனியாய்க் ...
70. விண்ணப்பம் உண்டு விளம்பக்கேள்.

பால், முந்திரி, வாழைப்பழம், கரும்பு, தேங்காய் இவற்றைச் சுவைக்கும் தன்மை போன்ற பல் வகைப்பட்ட பாக்கள் வடிவாய் நீ இருக்கிறாய்.

தெளிந்த அமுதமாய், அமுதத்தைக் காட்டிலும் உயர்ந்த முத்தியைத் தருகின்ற கனிபோன்ற தமிழே! என் முத்தமிழே!

அறிவால் உண்ணப்படும் தேன் போன்று உள்ளாய். உன்னிடம் மகிழ்ச்சியுடன் நான் கூறும் வேண்டுகோள் ஒன்று உள்ளது. அதைக் கூறக் கேட்பாயாக!

## சீர் பெற்ற செல்வர்

70. - மண்ணில் .........

78. சீர் முப்பதும் படைத்த செல்வர் ஆர்

தமிழே! உன்னிடத்து, குறவஞ்சி, பள்ளு என்ற நூல்களைப் பாடிப் புலவர் சிறப்பு கொள்வர். அவற்றை எடுத்துப் படிக்க நீ கொடுப்பாய். அதனால் உனக்குத் தாழ்வு என்று ஏதேனும் பாவின் மூன்று இனங்களிலும் உண்டோ?

பாவின் எல்லாத் திறங்களும் வந்து பொருந்தி எந்நாளும் **சிந்தா**(கெடாத) **மணியாய்** இருக்கும் உன்னைச் **சிந்து**(ஒரு பாவின் பெயர்) என்று கூறிய அப்பெயர் நின் பெருமைக்குத் தகுமோ? தகாதல்லவா? அவ்வாறு கூறிய நாவானது கெடுமே.

வானத்தின் மேல் உள்ள எல்லாவற்றையும் முழுவதும் உணர்ந்த தேவர்களும் இராசகம், தாமதம், சாத்துவிகம் என்ற முக்குணங்களைப் பெற்றுள்ளார்கள். நீ பத்துக்குற்றங்கள் இல்லாமல் பத்துக் குணங்களை (அழகுகளை)யும் பெற்றுள்ளாய்.

ஒருவரால் உண்டாக்கப்பட்ட வண்ணங்கள் (நிறங்கள்) வெண்மை, செம்மை, கருமை, பொன்மை, பசுமை என்ற ஐந்தாகும். அவற்றிற்கு மேல் இல்லை. நீ அனைவரும் கண்ட நூறு வண்ணங்களைப் பெற்றிருக்கிறாய்.

நாக்கிலே தோன்றி மறையும் குறைபாடு உடைய உணவின் சுவைகள் ஆறு அன்றி வேறு உண்டோ? காதால் கேட்டு உணரும் சுவை ஒன்பதை நீ பெற்றுள்ளாய்.

தமிழைப் பெறாத மற்றையோர்க்கு அழியாத அழகு ஒன்று அல்லாமல் அதிகம் உள்ளதோ? ஆனால் நீ, நீங்காத அழகு எட்டைப் பெற்றுள்ளாய்.

எல்லோராலும் பாராட்டப்படும் அரசர், பொருள் கைப்பற்றிக் கொள்ளும் முறை மூன்றே ஆகும். நீ

பாடலில் பொருள் கொள்ளும் முறை எட்டைப் பெற்றுள்ளாய்.

அழகு பொருந்திய மூன்று பிரிவான அறம், பொருள், இன்பம் அல்லாமல் நீ ஐம்பால் (ஆண் பெண், பலர், ஒன்று, பல) களிலும் உள்ளாய். உன்னைப் போல முப்பது சீர் (சிறப்பு) களையும் பெற்ற செல்வர் யார் உள்ளனர்?

## உன்னைப்போல் சிறந்தவர் யார்?

78. - சேரமான் .............

88. என்னபொருள் உனைப் போல் எய்தாவே.

சேரமான் கணைக்கால் இரும்பொறையின் காலில் பொருந்திய தளையை (சங்கிலி) யைப் பொய்கையார் என்னும் புலவர் மூலம் நீக்கினாய். நீ ஏழு தளைகளைப் பொன்போன்ற உன் திருவடிக்குப் பெற்றிருப்பது என்ன புத்தியோ?

என் அரசனே! அறிவின் வலிய புலவர்க்கு அறிவாகிய செந்தமிழாக நின்ற உன்னை **வெண்பா** (கள்ளமில்லாத வெள்ளை அறிவுடையபாட்டு) என்று சொல்வது உண்மைதானோ?

பண்பும் அழகும் ஒலியும் உடைய பாவே! நீ கிரேதா, திரேதா,துவாபர என்ற மூன்று யுகங்களிலும் தமிழ்ச்சங்கத்தில் இருந்தாய். உன்னைக் கலி

யுகத்திற்குரிய பாடல் (கலிப்பா) என்று கூறுவது முறையோ?

என்றும் கெடாத இருள் போன்று பரவிய மயக்கத்தைப் போக்கி நல்வழிப்படுத்தும் உன்னை மருளைத் தரும் பாடல் (மருட்பா) என்று கூறுவது சிறந்த வழக்கு ஆகுமோ?

தெளிவுதரும் பாடல் பொருத்தம் ஒரு பத்தையும் பெற்றிருக்கும் உன்னை வேறுபாடு (விருத்தப்பா) உடையாய் என்று சொல்லுவது தகாது.

முச்சுடர் (சூரியன், சந்திரன், தீ) தோன்றி உலகத்து இருள் தொகுதியை முதலில் ஒளியால் நீக்கும் என்று கூறுவர். உன்னைப்போல என் உள்ளத்து இருளை அவை நீக்குமோ?

எல்லோருக்கும் கொடுக்கும் தன்மையில் சிந்தாமணி உயர்ந்தது என்று சொல்லுவர். அம் மணியின் கொடைத்தன்மையும் உன் பெயரினை (சிந்தாமணி என்ற நூல்) வைத்துக் கொண்ட பெருமையால் வந்தது அல்லவா?

தாழ்ந்து தொங்கும் ஒளியுடன் கூடிய மாலையும், கழுத்தில் அணியும் அணிகலன்களும், தோள்வளையம் மற்றும் எல்லாம், **அலங்காரம்** என்னும் நூலாகிய உன்னைப்போல் ஆகுமோ?

அறிவை வளர்க்கும் உன்னைச் சாதாரணமாகப் பொருள் என்று சொல்லும்பொழுது எல்லாம் நீ வளர்வாய். பொன்னையும்(பொன் தேய்ந்து குறையக் கூடியது) பொருள் என்று கூறுவது பொருத்தம் ஆகுமோ?

சுவரில் துளையிட்டுக் கைப்பற்றும் பொருளும் அரசர்கள் வசூலித்தல் மூலம் பெறும் பொருளும் வளரும் பொருள்களே!

மக்கள் கையில் உள்ள பொருள்கள் எல்லாம் என்ன பொருள்கள் அவை. உன்னைப் போல் அவை உறுதுணையாக வந்து உதவமாட்டா.

## தமிழின் பெருமை

88. - நன்னெறியின்

95. வாசகருக்கு நீ பொருளாய் வந்தாயோ?

நல்லொழுக்கமுடன் இவ்வுலகில் புகழ்பெற்று வாழ்வதற்கும் அவ்வாறு இம் மண்ணுலகில் புகழுடன் வாழ்பவர் விண்ணுலகம் சென்று தெய்வ வடிவத்துடன் இருந்து இன்பத்தை அனுபவித்து வாழ்வதற்கும் ஆராய்ந்து பார்த்தால் உன்னைத் துணையாகக் கொண்டு புகழ் அடைந்தவர்களுக்கு அந்நிலை இயலும். உன் புகழைப் பெறாதவர் களுக்குத் தெற்குத் திசையில் உள்ள எமனுலகமே கிடைக்கும்.

குளிர்ந்த தமிழ்மொழியே! இவ்வுலகில் சிவபெருமான் உன்னுடைய தமிழ்ச்சங்கத்தால் உயர்வு பெற்றாரா? உயர்வாகக் கருதப்படும் அச் சிவபெருமானால் நீ உயர்வு பெற்றாயோ?

தாமரை மலரை வீடாகக் கொண்டு வாழும் கலைமகளின் அழகிய கையில் ஏட்டுச் சுவடியாய் நீ இருந்தாயோ? உன்னை ஏட்டுச் சுவடிகளாக்கி அவற்றின் மேல் கலைமகள் இருந்தாளோ?

படமெடுத்தாடும் பாம்பைத் தாழ்வான படுக்கையாகக் கொண்ட திருமாலைப் பின் தொடர்ந்து நீ சென்றாயா? அத் திருமால் சுருட்டிய பாயுடன் உன்னைத் தொடர்ந்து வந்தாரோ?

அகத்திய முனிவர் முருகனை நோக்கி, ''என் வாழ்வே! தமிழ்மொழியை எனக்குக் கற்பிக்க வேண்டும்'' என்று வேண்டிக் கேட்டுக் கொள்ள, முருகக் கடவுள் அம் முனிவருக்குத் தமிழ் மொழியாகிய உன்னைக் கற்பித்தாரா? ஒளியே! அம் முனிவரைத் தமிழ் கற்குமாறு நீதான் சொன்னாயோ?

வேறுபடாத என் அன்பராகிய சிவபெருமான் அகப்பொருளாக உன் முன் நின்றாரா? நீண்ட மதுரையில் எழுந்தருளியுள்ள சொக்கநாதருக்கு நீ பொருளாக வந்தாயோ?

## தூது அனுப்பக் கருதுதல்

95. - பாசமுறும் .........

101. காண்பாய் என் பெண்மதி நீ காணாதே.

நான் சொக்கநாதர் மீது மயக்கங்கொண்ட செய்தியைக் கண்டு நீ இரக்கங் கொள்வது நீதியாகும். அன்றி உன்னுடைய செய்தியை நானோ சொல்லத் தகுதி உடையேன்.

இனிய சொற்களை உடைய தமிழே! ''கற்க கசடற...தக'' என்ற குறட்பாவின் சொற்களால் எல்லாம் அறிவுரைமூலம் எல்லோருக்கும் நல்ல அறிவுரை கூறிக் கரை ஏற்ற நீ வல்லமை படைத்துள்ளாய்! உனக்கு நான் அறிவுரை கூற வல்லமை பெற்றுள்ளேனா?

பாடப்பட்டுள்ள திருக்குறளாகிய இரண்டடிக் குள்ளே எல்லா உலகமும் அடங்கும் என்றால் நேரடியாகிய நாலடிக்கு (நாலடியார் எனும் நூல்) வேறு நிலம் உள்ளதோ?

ஓர் அடிக்கு ஓர் ஆயிரம் பொன் சிந்திய ஐயராகிய சிவபெருமானைத் தெருவிலே போய் யாசித்துச் சுந்தரர் பொருட்டு, பரவை நாச்சியாரிடம் தூது செல்லுமாறு அனுப்பி வைத்தாய்.

அவ்வாறு இருந்தும் பெருமையாக ஒரு தூது சொல்லி வா என்று நான் கூறுவேன். என் காமநோய்

வருத்தத்தை நீ ஆராய்ந்து பார். என் பெண் அறிவைக் குறித்து நீ ஆராயாதே.

## என் கவலையை நீக்கு

101. - ஆண்பனைநல் ..........

106. புண்கள் எல்லாம் மாறப் புரிகண்டாய்.

நீ திருஞான சம்பந்தர் மூலம் ஆண்பனை எல்லாவற்றையும் பெண்பனை ஆக்கினாய். காரைக்கால் என்ற வளமான நகரில் வாழ்ந்த பெண்களில் சிறந்த காரைக்கால் அம்மையாராகவும் ஔவையாராகவும் நீ வந்து தோன்றினாய்.

நட்பு பொருந்திய திலகவதியாருடன் திருநாவுக் கரசராகவும் இவ் வுலகில் பிறந்தாய்.

வரிசையாக மாளிகைகள் உடைய தவமும் தியானமும் உடையவர் வாழும் மதுரை நகரில் அக்கவடம் (உருத்திராக்க மாலை) அணிந்த திருநீறு பூசிய அடியார்களைப் பார்த்து மனம் இளகும் - மானம் உடையவராகிய மங்கயைர்க்கரசியாரின் ஆசிரியராக விளங்கிய இசைஞானியாரின் உயர்வான குழந்தையாக (சுந்தரமூர்த்திநாயனார்)த் தோன்றி வனப்பகையார், சிங்கடியார் ஆகிய இருவருக்கும் தந்தையாக இருந்து புகழை வளர்த்தாய்.

இவ்வுலகில் நீ பெண்கள் எல்லோரும் வாழப் பிறந்தமையால் என் உள்ளத்தில் எழுந்த கவலைகள் எல்லாம் நீங்கச் செய்வாய்.

## தூதுவிடக் கருதிய பொருள்கள்

106. ........... ஒண்கமலத்து

112. குன்று அனையாய் உன்னுடனே கூறுகேன்

ஒளிபொருந்திய தாமரையில் தங்கி உள்ள அன்னத்தைத் தூதாக விடுக்கக் கருதினேன். அந்த அன்னம் இன்னமும் அங்குள்ள சொக்கநாதரைக் காணவில்லை என்று சொல்வார்கள்.

நிலைபெற்ற என் தந்தையே! ஒரு வண்டைத் தூதாக அனுப்பினால், அது என்னுடைய காமத்தைச் சொல்லாமல் சொக்கநாதரைக் கண்டு திகைக்கும்.

தவறாமல் ஒரு மானைத் தூதாகச் 'சென்று என் செய்தியைத் தூது சொல்லி வா' என்று விடுக்கக் கருதினால், அழகிய புலித் தோலை ஆடையாக அணிந்த சொக்கநாதரை நெருங்காமலேயே திரும்பி வந்துவிடும்.

மற்றும் அழகிய குயிலை நான் தூதாக விடுப்பேன். அக்குயிலும் காக்கையினம் ஆதலால், சிவன் அருகில் இருக்கும். கரிக்குருவி என்னும் பறவையைக் கண்டு காக்கையினமாகிய குயில் அஞ்சும்.

ஆகையினால் இம்மனத்தைத் தூதாக ஏகு என்று கூறுவேன். இந்த மனமும் அந்த உள்ளத்தைக் கடந்த சொக்கநாதரை நெருங்காது.

யாரை எவ்விதம் தூது விடுப்பது என்று ஆராய்ந்து வருந்தினேன். பொன்மலை போன்ற தமிழே! என் கவலை எல்லாவற்றையும் உன்னிடத்துக் கூறுகின்றேன். நீ கேட்பாயாக.

## தமிழின் சிறப்பு

112. சென்றாலும் ....

118. சூத்திரமா பாடியருள் தோற்றமும் மாத்திரமோ

நீ தூதாகச் சென்றாலும் முன்னோர் இயற்றிய பத்தொன்பதினாயிரத்து இருநூற்றுத் தொண்ணூற்று ஒன்று (19,291) என்ற கணக்கு உடைய தொடைக்கு உரிமை உடையாய்!

நீ சொக்கநாதரிடம் போய் எனக்கு ஒரு தொடை (மாலை) வாங்கிவந்து கொடுத்து உதவமாட்டாயோ? காளையின் வடிவத்தை எழுதிய கொடியை உடைய சிவபெருமானுக்கு நீ வேறோ?

தருமி இல்லற வாழ்க்கையைப் பெறுவதற்காக உயர்ந்த ஆயிரம் பொன் முடிப்பை (கிழி) அடைய, ''கொங்குதேர் வாழ்க்கை...'' என்று தொடங்கிய பாடலை எழுதிக் கொடுத்த செய்தியும்,

நக்கீரன் பொருத்தம் இல்லாத வகையில் பாண்டியன் அவையில் சொற்போர் புரிந்தான் என்று இகழ்ந்து பேசிச் சொற்போர் புரிந்தவர்க்கு வாக்கு வன்மையும்,

பண்ணோடு கூடிய பாடலுக்காக மனம் இரங்கி ஒரு பாண பத்திரனுக்குச் சேரமன்னனிடம் போய்க் கொடுக்குமாறு சீட்டுக்கவி வரைந்து கொடுத்த சிறப்புச் செயலும்,

பாட்டின் இலக்கணத்தில், நாவிலே உறுதியாகக் கூறப்படும் பொருள் இலக்கணத்தை நன்றாக அறுபது நூற்பாக்கள் சிவபெருமானால் பாடப்பட்டு அருளிய காட்சியும் ஆகிய இவை மட்டுமோ?

## சொக்கநாதர் பெருமை

**119. உன்னோடு அவர் விளையாட்டு ஒன்றோ**
**வடமதுரைக்கு...**

**123. உள்ளிருந்த சொக்கர் உனக்குள் அன்றோ.**

உன்னோடு சேர்ந்து அவர் ஆடிய விளையாட்டு ஒன்று மட்டுமா? இன்னும் பல உள்ளன. உன் பின்னால் அந்நாளில் வந்தவர் யார்? சொக்கநாதர் அல்லரோ?

காரியார், நாரியார் என்ற இரு புலவரும் பாண்டியன் மீது பாடிய பாடல்களில் பாதியைக் கவர்ந்து கொள்ள வழி இல்லாத காட்டில் துணையாக வந்தவர் யார்?

அன்புடன் தன்னைப் போற்றி வழிபடும் பாணபத்திரனுக்காக ஒரு கிழ உருவில் தோன்றி விறகு சுமந்தவர் யார்?

அப்பாணபத்திரனுக்குத் தெளிவாக ஒருவராலும் கொடுக்க இயலாத சங்கப்பலகை இட்டவர் யார்?

அப் பாண பத்திரனின் அன்புடைய மனைவி யாகிய விறலிக்குப் பகையாக வந்த விறலியை அவைக்குப்போய் இசையில் வென்று அவரை நோக்கி வெற்றியைப் பாணபத்திரன் மனைவிக்கே கிடைக்குமாறு செய்தவர் யார்?

மதுரைக் கோயிலின் உள்ளே இருக்கும் சொக்கநா தர், உனக்குள்ளே (தமிழிடத்தில்) இருக்கின்றார் என்பது உண்மையாகும்.

## தமிழின் உயர்வு

123. - எள்ளி ..........

124. வடமொழியில் வேத வசனமே ஈசர் ....

133. மொழியார் குழறி மொழிவார்,

தமிழ்மொழியை இகழ்ந்து வடமொழியில் உள்ள வேத வசனங்களே சிவபெருமானுக்குரிய உறுதியான மொழியாம் என்று சிலர் கூறுவர். அஃது அறியாமையே.

மக்களை அழிக்கின்ற வேற்று மதங்களை ஒழிக்க வந்த சிங்கம் எனத் திருஞானசம்பந்தர் பாண்டிய நாடு முழுவதும் சென்று சைவ சமயத்தை நிலைநாட்டிய அந்நாளில்,

முதலில் விரைவாக வையை ஆற்றில் சமணர் களுடன் சொற்போர் புரிந்து மறையாகிய சைவ ஆகமத்தை நிலை நிறுத்தினாய். ஆராய்ந்து பார்த்தால் ஏடு எதிர் ஏறிச்சென்று நின்ற இடமாகிய ஏடகமே தமிழ்மொழியாகிய உன் சிறப்பினை உணர்த்தாதோ? (உணர்த்தும்.)

வேதமாகிய வடமொழி மறையால் சூரியஒளி உள்ளே நுழையாமல் அடைக்கப்பட்டிருந்த கதவு, தமிழ்மொழி ஆகிய உன்னால் திறக்கப்பட்டது. திருமறைக் காட்டில் உள்ள கோயிலைப் பார்த்தாலே, அதுவே இச்செய்தியைச் சொல்லாதோ?

வடமொழியில் உள்ள நான்கு வேதங்களும் அமிழ்தத்தைக் காட்டிலும் இனிமை மிக்கது என்று நினைத்துக்கொண்டு வடமொழியைக் கற்ற அகத்திய முனிவருக்கு என்னிடம் அன்புள்ளவராகிய சிவ பெருமான், முருகக் கடவுள் மூலம் தமிழைக் கற்பித்தார். அதனால் **'தமிழ் முனிவர்'** என்று அகத்தியர்க்கு வழங்கப்பட்ட அப்பெயரே இச் சிறப்பை அறிவிக்கும்.

தமிழில் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளை, மறைநூலை ஆக்கியவராகிய திருவள்ளுவர் பாடினார். அச்செயலைப் பரமராகிய சிவபெருமான் பாடிய பாடலே சொல்லும் அன்றோ? (சொல்லும்.)

மறக்க முடியாத கல்வியின் அளவை எல்லாம் சொல்லும் மறைகளால் காணமுடியாத சிவபெருமான் கீழே நிற்கவும் நீ அழகிய சங்கப்பலகைமேல் ஏறி இருந்தாய். இஃது ஒன்றே போதாதோ? (போதும்.)

சொக்கநாதருடனே அளவற்ற நரிகளைப் பரிகளாக மாற்றி நீ அழைத்தாய். நான்கு வேதங்களும் குதிரைகளாக வந்த செயலைப் பற்றி அந்த வாசியே (குதிரையே) சொல்லாதோ? (சொல்லும்.)

தலைவராகிய சிவபெருமான் தென்திசையை விரும்பி வந்து நடனமாடிய செயல் அனைத்தும் உன்னிடத்துக் கொண்ட அன்பினால் என்று அப்பால் உள்ள நாட்டிலும் அறியாதவர் யார்?

உன் பெயரை (தமிழ் என்பதை)ப் பழி நிறைந்த வேறு திசைச் சொல் பேசுவோர் சொல்லமாட்டார். திருவாய்மொழி உடையார் குழறிக் குழறி உன் பெயரைச் சொல்வர்.

## சிவபெருமான் சிறப்பு

133. - அழியா

134. உருவால் அவாய் இருக்கும் ஓத அரிய முத்தி ...

139. உலகம் பரிக்கும் முறை உள்ளார்.

அழியாத வடிவத்தால் வேதங்களும் விரும்பித் துதிப்பதற்கு இயலாத முத்தியைத் தரும் திருவாலவாயில் கோயில் கொண்டிருக்கும் செல்வந்தரும்,

ஒப்பற்ற திருமால் வடமதுரைக்கு வந்து சேருவதற்கு முன்னால், வந்த வடிவம் (மீன் வடிவம்) இதுதான் என்று சொல்லுமாறு பெரிய மதுரையில் தோன்றி மீன்கொடியை உயர்த்தி அரசுபுரிந்த சுந்தர பாண்டியரும் (சிவனும்),

துன்பத்தை நீக்கும் பார்வதியை உடலின் ஒரு பகுதியில் விளங்கச் செய்து மதுரையின் ஒரு பக்கத்தில் மூல லிங்கமாக முளைத்துத் தோன்றியவரும்,

அந்த எட்டுத் திசைகளைப் போல் எட்டு அயிராவதங்கள் என்னும் யானைகள் சுமந்து கொண்டிருக்கும் அழகிய கோயிலுக்குள் வீற்றிருக்கும் புண்ணியனாராவார்.

அக்கோயிலுக்குப் பக்கமாக இடமும் கோயிலும் இதுவே ஆக இந்திரன் விண்ணகத்தில் இருந்து இங்கு

வந்து வழிபடுவதற்குரிய கடம்பவனத்தில் தங்கியுள்ள ஒளி உடையவரும்,

போரிலே கொல்லும் கூரிய நுனி பொருந்திய அம்பாகிய திருமாலும் அறிவதற்கு இயலாதவரும் மணிமுடியைச் சூடி ஆளும் முறை உள்ளவருமாக விளங்குபவர் சிவபெருமான்.

### வணங்கத்தக்க பூசைப் பொருள்கள்

139. - பலநாளும்

140. நின்றவூர் பூசலார் நீடு இரவெலாம் நினைந்து ...

148. சமைத்து வணங்கத் தகுமோ?

திருநின்றவூரில் இருந்த பூசலார் நாயனார் பலநாளாக நீண்ட இரவெல்லாம் நினைந்து மலை போல உயர்ந்து விளங்கக் கட்டிய கோயிலும்,

நன்மையைத் தரும் தாயாக விளங்கும் கங்கையை அணிந்துள்ள சடைமுடி குளிர்ச்சி அடையும்படி கண்ணப்பநாயனார் வாயில் கொண்டு வந்து உமிழ்ந்து நீராட்டிய சிறந்த நீராட்டு நீரும்,

தூய்மையான மழை பெய்ததால் துன்பம் மிகுந்த திருக்குறிப்புத் தொண்டர் துணிகளைத் துவைக்கும் நீர்த்துறையில் மனவலிமையோடு கொடுத்த தெய்வங் கட்குச்சாத்தும் பரிவட்டமும்,

இன்பமாக நீங்க முடியாத அன்புடைய மானக்கஞ் சாற நாயனார் சாத்திய அழகிய மயிர் முடி சுற்றிய அடியார்கள் சடைமுடியுடன் தொங்க விடும் பஞ்சவடியும்,

அழகிய காளையை ஊர்தியாக உடையவர் மன்மதனை முன்னர் சினந்து சிவந்த கண்ணைப் போல் மூர்த்திநாயனார் முழங்கையைத் தேய்த்துச் சேர்த்துத் தந்த சிவந்த சந்தனமும்,

மன்னன் ஒருவன் தன்நாடு காப்பதைப் போல உலகத்தைக் காக்கும் திருமால் சாத்திய கண்ணாகிய மலரும்,

உண்ணும் உணவாக, விதைத்த நெல்லை எடுத்துவந்து உணவு ஆக்கி விருந்தளித்த இளையான் குடி மாற நாயனாரின் உணவும்,

சிறுத்தொண்ட நாயனார் சமைத்துக் கொடுத்த பெருமை மிக்க பிள்ளைக் கறி அமுதும்,

அரிவாட்டாயர்(அரிவாளை உடைய தாயர்) மாவின் பிஞ்சுக் காயை (மாவடு)க் கூட்டுச் சேர்த்துச் சமைத்த மாவடு உணவும்,

நீக்க முடியாத கருமை நிறைந்த இருளிலே கணம் புல்ல நாயனார் தம்முடி மீது சிறப்பாக ஏற்றிய சிவந்த விளக்கும்,

ஆகிய இத்தகைய அரும் பொருள்களைப் படைத்து வணங்கத் தகுந்த சிவபெருமானுக்கு யாரால் பூசைப் பொருள்களைப் படைத்து வணங்க முடியும்?

## தமிழே துணை!

148. - உமைக்கு அன்பர் ....

151. இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்
விருந்து அமிழ்தம் என்றாலும் வேண்டேன்-
வருந்தினன்மால்

உமைக்கு அன்புடைய நாயகராகிய அவர்க்கு வழிபாடு நீ பாடும் பாட்டே ஆகும் என்று முன்னர் சுந்தரமூரத்தி நாயனார்க்குத் 'தமிழ்ச்சொற்களால் பாடல் பாடுக' என ஆணையிட்டமையால் அவர் சொல்படியே நீ செய்தாய்.

நான்கு வேதங்களும் திகைத்து மறைந்து ஒதுங்குமாறு நீ அவனை (சிவபெருமானை)ப் பித்தன் என்று திட்டினாய். அவ்வாறு நீ திட்டினாலும் அதுவே அவர்க்கு வாழ்த்து ஆகும் போலும். இஃது உண்மை யாகும் என்பதை நான் அறிந்தேன்.

பெருமை பெற்ற தமிழே! நீ எனக்குத் துணையாக இருப்பதால், நான் இதுவரை உயிரோடு இருந்தேன். இல்லையென்றால் இறந்திருப்பேன். தேவர்களுடைய அமிழ்தமே என்றாலும் விரும்ப மாட்டேன். அவர் மீது கொண்ட காம மயக்கத்தால் வருந்தினேன்.

## காமநோயும் நோய்நீங்க வேண்டுதலும்

152. வெல்ஆனை தின்ற விளங்கனி யானேன்
விரகக் ...

167. மாய்ந்தாலும் பின்படைக்க வல்லையே.

போரிலே வெற்றி பெறும் யானை உண்ட விளங்கனிபோல ஆனேன். காமமாகிய மலையைப் போன்ற யானை தின்ற கரும்பைப்போல ஆனேன்.

நல்லாசிரியரைத் தேடி அலையும் குளிர்ந்த உள்ளம் உடையவரைப் போல வாடினேன். கொடிய பனியால் வாடிய செந்தாமரை மலரைப்போல ஆனேன்.

ஓடத்தின் மேல் ஏறித் திருக்கொள்ளம் பூதூர்க்குச் செல்லும் வழியில் ஆற்றின் வெள்ள மிகுதியைக் கடந்தாய். என்னுடைய காம வெள்ளத்தில் இருந்து என்னைக் கடத்தி விடவேண்டும் அல்லவா?

நீ விலகிச்செல் என்று ஒதுக்கிய பகைகொண்ட சமணர்களை வலிய கழு ஏறச் செய்தாய். என்மீது சினந்து வந்த மன்மதனை அவ்வாறு கழுவேற்ற மாட்டாயோ? செய்வாய்.

திருநீற்றைப் பூசியே அன்று கூன் பாண்டியனின் முதுகில் இருந்த கூனை நீக்கினாய். இன்று மன்மதனுடைய சிவந்த கரும்பின் வளைவை நீக்கி நிமிரச்செய்ய மாட்டாயோ?

கூன் பாண்டியனுக்கு உடம்பில் தோன்றிய வெப்பமாகிய நோயினைத் தீர்த்தாய். என்னுடைய கொடிய காமத்தால் தோன்றிய வெப்ப நோயைப் போக்க நீ விரும்ப மாட்டாயா? அவ்வாறு நீ செய்தால் பிழை இல்லையே!

திருநாவுக்கரசருக்குச் சமணர்கள் கலந்து கொடுத்த நஞ்சு உணவை அமுதமாகச் செய்தாய். இன்று எனக்கு ஆக்கிக் கொடுக்கும் நஞ்சாகத் தோன்றும் உணவை அமுதமாகச் செய்ய மாட்டாயோ? (செய்வாய்.)

ஒருவராலும் நீக்க முடியாத கொடிய நெருப்பில் நீ அகப்பட்டும் வேகாமல் இருந்தாய் என்பார்கள். என்னைக் காமச் செந் நெருப்பு சுடாமல் இருக்கச் செய்யமாட்டாயோ?

கொங்கு நாட்டில் உள்ள திருச்செங்கோட்டிற்கு வந்து யாரும் பனியால் வாடாமல் அடியார்களின் துன்பத்தை நீக்கினாய். நான் காமப் பனியினால் வாடாமல் இருக்க நீ மனம் இரங்காயோ? (இரங்குவாய்.)

திருநாவுக்கரசரைக் கல்லில் கட்டிக் கரிய கடலில் இட்டபோது அவர் வலிய கல்தூணுடன் மிதக்கும் படிச் செய்தாய். என்னை அக்கடல் பகையாகக் கருதிக் கொல்லாமல், என்னுடன் உறவாக இருக்கச் செய்ய மாட்டாயோ? (செய்வாயாக.)

மன்றத்தில் இருந்த மிக உயர்ந்த ஆண் பனையைப் பெண்பனையாக மாற்றினாய். அப் பனையின் மீது உள்ள எனக்குப் பகையாக இருக்கும் அன்றில் பறவையை வேறு ஒரு பறவையாக மாற்ற மாட்டாயா?

மிகவும் பழைமையாகத் தெற்குத் திசையில் உள்ள பொதியமலையில் இருக்கும் சந்தனத்துடன் தென்றலையும் என்னோடு அன்புடன் இருக்குமாறு நட்பை ஏற்படுத்த மாட்டாயோ?

உன் முன்னால் இருந்து பாடும் இசை அனைத்தையும் உனக்குரிய பெண்களாகச் செய்து சேர்த்துக் கொண்டாய். அவை என்னோடு பகை கொள்ளாது இருக்க நீ சொல்ல மாட்டாயோ?

ஊதுகொம்பு, காளம், பல்லக்கு, பந்தர் ஆகியவை முத்தினால் அமைந்தனவாக நீ பாடலால் பெற்றாய். பொன் போன்றாய்! முத்துக்கள் என்னைச் சுடாமல் நான் அணிந்து கொள்ள முத்து மாலைகளைப் பூட்ட மாட்டாயோ?

முற்காலத்தில் இறந்த பூம்பாவையின் எலும்பைப் பெண்ணாக நீ ஆக்கினாய். ஆதலால் எலும்பாய் மெலிந்த என் உடம்பையும் அழகிய பாவை போன்ற நல்ல வடிவமாக ஆக்க மாட்டாயோ?

வெளிப்படாமல் மறைய,மூன்று ஆண்டுகளுக்கு முன் இறந்தும் பெரிய முதலை வாயிலிருந்து அக் குழந்தையை நீ படைத்தாய். ஆதலால் நான் இறந்தாலும் பின்னர் படைக்கவும் வல்லமை உடையை.

## நாயன்மாரும் அடியாருமாக நீ இருந்தாய்

167. - ஏய்ந்த உரை

168. செய்தாள் என்று என்சொல் ........

177. உன்கையில் ஆகாதது ஒன்று உண்டோ? -
என்கையால்

பொருத்தமான சொற்களையே கூறினாள் இவள் என்று மதித்து என் சொற்களைச் செவியால் கேட்டுச் சிந்தித்துச் சொக்கநாதரிடம் செல்வாய். இங்கே திரும்பி வராமல் அங்கேயே இருக்க நினைக்காதே.

உண்மையாக ஒளி நிறைந்த சொக்கநாதரிடம் சென்று அங்கே தங்கி இருந்து அவரிடம் இனிமை யாகப் பேசி எனக்காகத் தூது சென்று வரக்கூடியது வேறு ஒன்று உண்டோ? (இல்லை.)

அன்புடனே மனத்தினால் தடவினும் ஒருவராலும் காட்ட இயலாதவராக விளங்கும் சிவபெருமானைத் தந்தையாருக்குக் கைவிரலால் சுட்டிக் காட்டிய அருள்காளையாகிய திருஞான சம்பந்தரும்,

தெய்வத்தன்மை வாய்ந்த வெள்ளிமலையில் உள்ள சிவபெருமானைப் போற்றிக் காண முயன்று திருவையாற்றில் தனக்கு ஆதரவாகக் காட்சி கொடுக்கக் கண்டு வழிபட்ட திருநாவுக்கரசரும்,

சிவபெருமான் அளந்து கொடுத்த சிறந்த பொன்னைத் திருமணி முத்தாற்றில் போட்டுவிட்டுத் திருவாரூர் குளத்திலே தேடி எடுத்து அருள் செய்த தலைவராகிய சுந்தரரும்,

பல வளங்களும் நிரம்பி விளங்கிய திருக்காளத்தி எனும் ஊரில் தோன்றிய காட்சியைக் கயிலாயத்துக் காட்சியைப் போன்றது என நெடிதாகக் கண்டு பாடியவராகிய நக்கீரரும்,

மேலே கூறிய நால்வரும் நீயாகவே இருந்தது மட்டும் அல்லாமல், அதற்கு மேலும் கேட்பாயாக!

தமக்கெனத் தாய் இல்லாதவராகிய கடவுளும் தாமே ஒரு தாயாக ஒரு பெண்ணிடத்து வந்திருந்தார்.

அம்மையே என்று தம் சொல்லால் அழைத்த காரைக்கால் அம்மையாருக்கு முன் அம்மையாராக, வெண்மையான காளையை ஊர்தியாகக் கொண்ட வேந்தராகிய சிவபெருமான் வெள்ளையானையின் மேல் ஏறிக் கயிலை வரச்செய்த அறிஞராய்,

நிறைந்த உவர்மண் வழிந்து இருந்த தோற்றத் தினால் வண்ணானை வெண்ணீறு பூசிய அடியவர்

என்று கருதிக் கைகுவித்து வணங்கித் தொண்டு செய்த அடியவராகிய சேரமான் பெருமாள் நாயனாரும் ஆகி,

எங்கும் உலாவித் தெற்குக் கயிலைமலைச் செல்வரிடம் சென்றாயே! உன் செயலால் முடியாதது ஒன்று உண்டோ?- என்று பலபேரும் சொல்வதால்,

## தூது செல்ல வழி முறை கூறல்

178. ஆயும் அவள் பாகத்து அன்பரும் உக்கிரராம் ....

183. வேறும் பொதிசோறு வேண்டுமோ?

உமையை ஒரு பாகத்துக் கொண்ட அன்பராகிய சிவபெருமானும் உக்கிரகுமார பாண்டியன் என்று அழைக்கப்பட்ட முருகக் கடவுளும் ஆட்சி செய்து பாதுகாத்த தென்மதுரைக்கு இனிமையாக வாய்த்த திருத்தமான வழியிலேயே (தமிழே) நீ செல்வாயாக! நீ செல்லுகின்ற வழிகளில் எது நல்லவழி என்று கேட்பாயானால், நான் சொல்லக் கேட்பாயாக!

எவ்வழியாக நீ போனாலும் வெற்றி பெற்றே மீள்வாய். உன்னை நினைத்து, 'வேயுறு தோளி பங்கன்' என்னும் ஞானசம்பந்தரது பாடலைப் பாடிக்கொண்டு செல்பவர்களின் காரியம் உறுதியாக நிறைவேறும். ஆதலின் நீ சொக்கநாதரிடம் செல்வாயாக!

அவ்வாறு செல்வதில் தடை ஏதேனும் உள்ளதோ? (முன்பு) திருவையாற்றிலே காவிரி ஆறு குறுக்கே

தடுக்கவும் அவ்வெள்ளத்தைக் கடந்து நீ சென்றாய் என்பதை நான் அறியேனோ? (அறிவேன்.)

இடையில் ஓரிடத்திலே பாலை ,த்தை நெய்தல் நிலமாக மாற்றினாய். மே ,ம் அதை மலர்ச்சோலையாகவும் நீ செய்வாய். நான் சொல்ல வேண்டியது என்ன உள்ளது?

எல்லோருக்கும் மேலானவரான சிவனே யாவரும் வியந்து பாராட்டும்படி கட்டுச் சோறு கொண்டுவந்து கொடுத்தார் என்றால், உனக்கு வேறாகக் கட்டுச்சோறு வேண்டுமோ?

## தூது செல்ல நீயே சிறந்தபொருள்

**183. - வீறாக**

**184. கற்பார் பொருள் காணார்**
**காசு பணம் காணில் உனை ...**

**190. பூண்டாய் நீ தானே பொருள் அன்றோ?**

பெருமையாகக் கற்றவர் போல நடித்து, அந் நூலில் உள்ள உண்மைப் பொருளைக் காணமாட்டார் பலபேர். காசு, பணம் தமக்குக்கிடைத்தால், அத்தகைய கொடியவரிடத்து உன்னை விற்றுவிடுவர். அத்தகையவரிடத்துப் போய்ச்சேராதே!

அவர்கள், நூல்பொருள் அறிந்து கற்றவரை இகழ்ந்து பேசுவார்கள். கற்றவரின் சொல் பொருள்

கேட்டு மகிழ்ச்சி அடையமாட்டார்கள். நாய் போலக் குரைத்துத் துரத்துவார்கள். அத்தகையோர் அருகில் செல்லாதே.

தெளிவாகத் தமிழ் நன்னூல் பாயிரத்தில் கூறிய படி அடங்கி இருந்து படிக்காமல் வாய்குழறி ஆயிரம் பேசுபவரை நெருங்காதே.

ஆராய்வதற்குரிய நூல்கள் பலவற்றைக் கற்று உணராத மூடர்களில் சிறந்த மூடர்களிடம் கூறும் அறிவுரைகள் எல்லாம் அறியாமையே ஆகும்.

ஒன்றும் தெரியாத ஒருவனுக்கு நூற்பொருளை எடுத்துக் காட்டுவோன் அவன் கண்ணுக்கு முன்னே ஒன்றும் அறியாதவனாகவே மதிக்கப்படுவான்.

அத்தகையவர் கண்ணுக்கு முன்னால் நாணாமல் இருக்காதே. (நாணியிரு) வாய்திறந்து ஒன்றும் வீண் பேச்சு பேசாதே.

கற்கும் முறை அறிந்து கற்காது அவையைக்கண்டு அஞ்சி நடுங்கிச் சொற்பொழிவு செய்பவரி டத்துச் செல்லாதே. அவர்களோடு நட்பு கொள்ளாதே.

உன்னுடைய பெருமையைத் தெரிந்து உன்னைப் போற்றிப் புகழாதவரை நீ விரும்பாதே. எந் நாளும் அழியாத சிறந்த செல்வமாவது கல்வியே என்று நீ மனத்துக் கொண்டுள்ளாய். நீதான் சிறந்த பொருள். வேறு சிறந்த பொருள் இல்லை.

## தமிழின் ஆற்றலும் தூது செல்ல அறிவுறுத்தலும்

190. - ஆண்ட

191. வலவா! நல ஆடுதுறையில் உன் போல் .......

198. தம்பால் இருந்து தரித்து ஏகி.

என்னை ஆட்கொண்ட வல்லவனே! நல்ல திருவாவடுதுறையில் எந்நாளும் கெடாத பொன் முடிப்பைப் பெற்றவர் உன்னைப் போல் வேறு யாரேனும் உண்டோ?

நல்ல விருப்பத்தை உண்டாக்க வந்த செங்கற்களைத் திருப்புகலூரில் பொன் ஆக்கியதால் இம் மண்ணுலகம் முழுவதையும் சிறந்த பொன்னாக ஆக்குகின்ற வல்லமையைப் பெற்றிருப்பவன் நீயே அல்லவா?

அனைவரும் விரும்பிப் பார்க்கத்தக்க சிறப்புடைய காவிரிப்பூம்பட்டினம் குறித்துப் பாடிய பட்டினப்பாலை என்னும் நூலினால் பதினாறு கோடி பொன்னைப் பெற்றது நின் வெற்றியே ஆகும்.

பொருளைத் தேடி எல்லோருக்கும் கொடுக்கும் நல்லவரிடத்துள்ள வறுமையைக் காட்டிலும் கல்லாதவரிடத்துச் சேர்ந்த செல்வம் கொடியது என்பதை நீயும் காண்பாய்.

கல்லாதவரிடத்துச் செல்லாதே. உன்மேல் அன்பில்லாதவர் இந்திரனைப் போல மிகுந்த

செல்வத்துடன் வாழ்ந்தாலும் அங்கே அவர்களிடம் செல்லாதே. அங்கு உணவு உண்ணாதே.

பெரும்புலவராகிய திருவள்ளுவர், ''தாம் இன்பம் அடைவதற்குக் காரணமாக விளங்கும் கல்வியைக் கண்டு உலகம் இன்பம் அடைவதைப் பார்த்து, கற்றறிந்தோர் கல்வியை மேலும் விரும்புவர்'' என்று கூறும் பெருஞ்சிறப்பு உன்னிடத்து அல்லவா சேர்ந்துள்ளது!

திருப்பாற்கடல் அமுதமே ஆனாலும் அதை உண்டவர்க்கு அல்லாமல் மற்றையோருக்குப் பசி நீங்குமோ? (நீங்காது.)

உன்னிடம் சேர்ந்து உன்னை நம்பாதவர் களுடைய தெருவை நீ நெருங்கிச் செல்லாதே. நல்லறிஞர்களிடத்தில் தங்கிச் சென்று மதுரைக்குள் நுழைக.

## சொக்கரை அடையும் நெறி கூறல்

198. - வம்பாக

199. பின்போய் யமன் ஓட பேர்ந்து ஓடும் வையையிலே .....

207. கட்டளையும் கண்டு களிகூர்ந்தே.

இயமன் புறங்காட்டி ஓட, பெயர்ந்து நீர் ஓடுகின்ற வையை ஆற்றிலே புதுமையாக முன்னே போய் எதிரில் சென்று நின்று நீராடி, அன்போடு வணங்கி, நீண்ட

இலக்கண நூல்களைக் கற்றறிந்தவர் மனம் போல ஆழ்ந்து அகன்ற அகழியைக் கடந்து சென்று, கடலால் சூழப்பட்டுள்ள உலகில் மேலும் மேலும் உயர்ந்து நிற்கும் வேதத்தைப் போல, வானத்தை விட மேலும் உயர்ந்து காணப்படும் மதிலைக் கடந்து சென்றால்,

மிருதியும் புராணமும் கலைகளும் போலச் சிறிதும் பெரிதுமாகக் காணப்படுகின்ற அழகிய தெருக்களை வலமாகச் சுற்றிவந்து நல்வினை, தீவினை ஆகிய இருவகைப்பட்ட வினைகளையும் நீக்கும்

சிவ ஆகமங்களைப் போல, முத்திக்கு விதை யான அறிஞர் கூறும் அழகிய கோயிலுக்குள் நீ புகுந்து, முதலில் தெற்குக் கோபுர வாயில் வழியாகச் சென்று, முறையாக அபிடேக முனிவரின் அன்பு போல் உண்டாகிய தளத்தின் பொருத்தமும் உள்ள இறைவனை அடைந்து,

தெளிந்த தவ ஒழுக்கம் உடையவர் சிவ லோகத்தை அடைந்து தங்குவதற்குப் படிகளை அமைத்துள்ள ஏணியைப்போலப் பெருமை பெற்று உயர்ந்த தலைமை வாய்ந்த கோபுரமும்,

மதுரையின் மேல் ஒருகாலத்தில் பெரிய நான்கு மேகங்களும் வந்து சுற்றி இருந்து மதுரையை அழியாமல் சேர்ந்து காத்தது போல உள்ள மண்டபமும்,

மலரில் பொருந்திய தேனை உண்ணச் செல்லும் வண்டு என்று சொல்லத்தக்க அளவில் சென்று மாளிகைகளில் வகுத்திருக்கும் வரிசை வரிசையாக உள்ள அறைகளின் ஒழுங்கையும் கண்டு மகிழ்ச்சி அடைவாய்.

## சொக்கநாதர் தோன்றும் காட்சி

207. - இட்டமணி

208. சிங்கா தனத்தில் சிறந்த திருவோலக்கம் ....

218. இருக்கும் சினகரத்துள் எய்தி - பொருக்கெனப் போய்.

தேவேந்திரனால் இடப்பட்ட மணிகள் வைத்து இழைத்த அரியணைமேல் வீற்றிருக்கும் அரசு இருக்கை சொக்கநாதருக்கு வாய்த்ததைப்போல் வேறு ஒரு கடவுளுக்குக் கிடைக்குமோ? கிடைக்காதல்லவா?

ஒளிவீசும் வீரக்கழல் கட்டிய இனிய தாமரை மலர் போன்ற (சிவபெருமானின்) திருவடிக் காட்சியைக் கண்டு வழிபாடு செய்த சிவபெரு மானுக்கு அழகிய செந்தாமரை மலரை ஒத்த கண்ணைப் பறித்துச் சாத்திய திருமாலும்,

உயர்ந்த தூய்மையான குற்றமற்ற திருவடியை வணங்காத தலை ஒன்றைக் கையில் எடுத்த பிரமனும்,

நீங்கிய வலிமை, பெருமை ஆகியவற்றைத் தனக்கு வகுத்துக் கொடுத்த கடம்ப மரங்கள் சூழ்ந்த மதுரைக்கு விமானத்தை அமைத்துத் தந்த இந்திரனும்,

அங்குத் தேன் ஒழுகும் அழகிய மலர் போன்ற பாதத்தை நெஞ்சினுள் பதித்து மணிகள் அழுத்தி அமைத்த முடிகள் ஒன்றுடன் ஒன்று அழுத்தாமல் வணங்குவதற்காகக் கணநாதர் கூறுகின்ற வெறுப்பும் சினமும் கொண்ட உட்பகையை நீக்கிய வலிமை யுடைய ஞானமுனிவர்களும் அருகில் சூழ்ந்து வரவும்,

தீமையில்லாத அருமை வாய்ந்த திசைக் காவலர்கள் கண்ணாடி முதலியவற்றை ஏந்தி நின்று இறைவனின் காட்சிக் குறிப்பைக் கண்டு ஏவல் செய்ய,

முன்நின்று அசுவினித் தேவர், மருத்துவர் இருவரும் எட்டு பேருடன் (அட்ட வசுக்கள்) நிறைந்த முப்பத்து மூவரும் (2+8+11+12=33) நின்று தொண்டு செய்ய,

நந்திதேவர் தமக்கு முன்னே நிற்கும் கூட்டத்தை வெள்ளப் பெருக்கு என்று கருதிப் பிரம்பினை எடுத்து அடிக்க ஓங்கியபோது வெள்ளம் இரண்டு பக்கமும் ஒதுங்குவது போல ஒதுங்க,

பதினெட்டு குலத் தேவர்கள் தம் கோடிக் கணக்கான முடிகள், பதினெட்டு மண்ணுலகத்தில் உள்ளவர்கள் முடிகளால் நெறியவும்,

உலகத்தில் செருக்கும் நட்பும் கொண்ட அங்கயற்கண்ணியுடன் வீற்றிருக்கும் சினகரம் என்னும் கோயிலுக்குள் விரைவாகச் செல்ன்று

## அடிமுதல் முடிவரை உள்ள சிறப்பு

219. எந்தாய் என்று ஏத்தும் இடைக்காடன்பின் போன ....

229. மண்சுமந்த சோதி மணிமுடியும்.

என் தந்தையே என்று துதித்துச் சென்ற இடைக்காடன் என்ற புலவன் பின்னே நடந்து சென்ற செந்தாமரையைப் போன்ற அழகிய பாதங்களும்,

திருந்தி வந்து மனம் தெளிந்து கழுத்தினை அறுத்துக்கொள்ளத் தொடங்கிய தென்பாண்டி அரசன் பொருட்டு இடக்கால் வலக்காலாகத் திரும்பிய அழகிய தொடையும்,

போர்த்தொழில் கற்பிக்கும் ஆசிரியனுக்காக அவன் பகைவனைக் கொல்லக் கோபித்து, அவன் வடிவுடன் செல்வதற்காக ஆயுதமும் உடைவாளும் அழகிய இடுப்புப்பட்டையும் இறுக்கிக் கட்டிய இடையும், அடிமையாக வழிபட்ட வந்தியின் பொருட்டுத் துணிக்குப் பொருத்தமாக இட்ட பிட்டு உணவைக் கையால் அள்ளி அள்ளி உண்டு பசி தீர்த்துக் கொண்ட வயிறும்,

ஒரு தாயைச் சார்ந்து தாய்ப்பால் உண்டு அறியாத அவர், தாமே பன்றிக் குட்டிகளின் வாய்க்கு முலைப் பால் ஊட்டிய அணிகள் பூண்ட மார்பும்,

பாண்டிய மன்னனுக்கு உயர்ந்த மாற்றுடைய பொன்னால் செய்த தூயமுடியில் பதிப்பதற்காக மாணிக்கம் கொண்டு வந்து விற்ற மலர் போன்ற அழகிய கையும்,

அழகுக்காக அணியாமல் உரிமைக்காக அழகிய தழை பொருந்திய ஆத்திமலரைச் சூடாமல் வேப்பமாலை அணிந்த அகன்ற தோளும்,

காக்கை செய்த போரினால் வருந்திய கரிக்குருவி வாழ்வதற்கு அதன் காதில் உபதேசம் செய்த கொவ்வைக் கனி போன்ற வாயும்,

குற்றமற்ற சொல் வாயிலாக நீ இருந்து வாழ்வதற்கு உனக்கு (தமிழுக்கு)க் கோயிலாகக் கொடுத்த சங்கக் குழை அணிந்த காதும்,

வைசியகுலத்துப் பெண் ஒருத்தியின் காரண மாகச் சென்று அவள் கண்ணீர் பெருக்கி அழுவதைக் கண்டு அவளைத் தழுவிக்கொண்டு தம் கண்ணீரால் அவள் துன்பத்தைப் போக்கி அருள் செய்த கண்களும்,

தெளிந்த நற்பண்பு உடையவராகிய மாணிக்க வாசகரின் இசையுடன் கூடிய பாடலுக்கும் வந்திக் கிழவி கொடுத்த பிட்டினுக்கும் மண் சுமந்த ஒளியோடு அழகும் பொருந்திய சென்னி(தலை)யும்,

ஆகிய இவற்றை எல்லாம்

## கோயில் காட்சி

229. - கண்சுமந்து

230. கண்டு களிகூர்ந்து கசிந்து கசிந்து உள்உருகி ...

245. தோற்றரவு செய்து துதித்ததன் பின்.

கண்களிலே ஏந்திப் பார்த்து மகிழ்ச்சி அடைந்து, மனம் கசிந்து கசிந்து உள்ளம் உருகித் தொண்டு செய்து திருவடித் தாமரைகளை முடிமேல் சூடி,

நெருங்கிக் காணப்படும் விண்மீன் கூட்டங்கள் தம்முடைய தலைமைக்குலத்தைச் சார்ந்தது என்று உற்றுப் பார்த்து வந்து நின்றனபோல் அடுக்கு அடுக்காக விளங்கும் விளக்குகள் எதிரே தோன்றவும்,

என்னைக் கோபித்து வெறுக்காதே, உன்குலத்து சூரியனும் நிலவைத்தரும் சந்திரனும் உண்டு என்று வெளிப்படுத்தியது போல் ஒளிவிட்டுத் திகழும் தங்க விளக்கும் முத்துமாலை போன்ற விளக்குகளும் அசைந்து எரியவும்,

ஒப்பற்ற மீன் கொடியை உயர்த்தினால், ஏக்கம் கொண்டிருக்கும் யான் எங்கிருப்பேன் என்று இடபக்கொடி கூறுவதுபோல் அங்கே இடபவிளக்கு சிவந்து தோன்றி அசையவும்,

நீங்காத அருள் நிறைந்த பன்றிவடிவம் உடைய அவ்விறைவனுக்கு மகிழ்ந்து புருடாமிருகம் போன்ற வடிவம் உடைய ஒருவகை விளக்கு நின்று போற்றவும்,

பகைமைத் தன்மை பொருந்தி வழிவழியாக வந்த சூரிய குலத்தார் வருவதைக் கண்டு நடுங்குவது போல் அருகில் உள்ள தட்டுகள் அசையவும்,

சூரியன், சந்திரன் என்ற இரு சுடர்களுக்கும் முன்னே தமிழாகிய உன்னையே சிறந்த ஒளிச்சுடர் என்று எடுத்துக்காட்டுவதுபோல் சொக்கநாதர் அக்கர ஆலத்தி ஒளியுடன் விளங்க,

தமக்குத் தகுந்தவளாகப் பொருந்திய உமா தேவியுடன், எனக்குப் பயந்து ஒளிந்து கொண்டார் என்று கங்கை தேடுவதைப் போலப் பொன் குடத்தில் ஏற்றிய விளக்கு எதிரில் சென்று சூழ்ந்து கொள்ளவும்,

தமிழ்ச் சொல்லுக்கு மனம் உருகும் அன்பு மிகுந்த அடியவர்களுக்கு அருள் செய்யும் முத்தி இதுதான் என்று காட்டுவதுபோல் கற்பூரத் தட்டில் கற்பூரச் சுடர் எழுந்து எரியவும்,

நம்முடைய குலத்திலே வந்து நம் தலைவர் அழகாகத் தோன்றினார் என்று சூரியன் மகிழ்ந்து அங்கு வந்தது போலக் கண்ணாடி அவ்விடத்தில் பொருந்தவும்,

இங்குள்ள அரசர் எம் குலத்தவர் ஆகிவிட்டார் என்று நிலவு காட்டுவதுபோல உயர்ந்த முடிமேல் வெண்மையான குடை ஒளிவிட்டு விளங்கவும்,

முந்திப் பெருகி எழுகின்ற கடலின் வெண்மை யான அலைகள் முற்காலத்தில் மாமிக்காக அழைத்த போது வந்தனபோல் வெண்சாமரை வீசவும்,

வேடிக்கை செய்யும் பாம்பாட்டிச் சித்தர் இவர் ஆதலினால், நீண்டபாம்புகள் படம் எடுத்து ஆடுவது போல ஆலவட்ட விசிறி எதிரில் நின்று காற்று வீசவும்,

நாட்டைவிட்டு நீங்காத தூய்மையான நறுமணமிக்க தென்றல் காற்றானது இவர் நம்முடைய அரசர் என்று காண்பதைப் போல அழகிய விசிறிகள் காற்றினை வீசிக் குளிர்ந்து நெருங்கவும்,

விடியற்காலை திருப்பள்ளி எழுச்சி தொடங்கு வதற்கு முன்பே திருவனந்தல் முதலாக அடியார்கள் வணங்கும் காலத்தில் பல்வேறு வடிவமுடைய தேவர்களுடன் கலந்து திருமுன் நின்று நீயும் வணங்குவாய்.

## ஒதுங்கி நின்று வழிபடல்

245. - ஆற்றல்

246. அரிய சிவாகமத்தோர் ஆதிசைவர் தம்பால் ....

256. மங்கைதனை கோட்டிகொளல் வல்லமையோ?

வேதஆகமங்களை ஓதி முதலில் புரோகிதர் வழிபட்ட பிறகு அரிய வலிமை உடைய சிவ ஆகமத்தவர்களாகிய ஆதிசைவரிடத்து அடைந்து

பூசைக்குரிய பொருள்களைப் படைத்து, திருமுன்பு நில்லாமல் ஒரு புறமாக ஒதுங்கி நின்று,

ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரால் அருமையுடன் பாடப்பட்ட தேவாரம் முதலாக (தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம்) நூல்கள் ஐந்தையும் மூவர் வடிவுடன் திருவருள் காட்டி அவர்களுடைய செயல்களையும் தம் செயல்களாக விளக்கி நின்ற சிவபெருமான் முன்னே பாடித் துதித்து,

திருவடிகளை நினையாது ஒழியாமல் தீய பாவி ஒருவன் செய்த பெரும்பாவச் செயலையும் நீக்கிய சிறந்த மருந்தாகிய சிவபெருமானை,

விளக்கு போன்ற மணிகள் பொருந்திய படத்தை உடைய பாம்பு சுற்றி எல்லை காட்டிய மதுரையை ஆளும் பாண்டியனே! அழகிய துதிக்கைகளை உடைய யானைகள் சூழ்ந்து சுமந்த விமானத்துள் தங்கியுள்ள கண்மணி போன்றவனே!

அரசனாக வந்து மைதடவிய கண்களையுடைய கரும்பை ஒத்த தடாதகைப் பிராட்டியாரைக் கூடி என்றும் பிரியாத, மூன்று கண்களையுடைய கனி போன்றவனே! உலகம் முழுவதற்கும் ஒப்பற்ற முதல்வனே!

மிகுந்த நீரையுடைய கங்கை நதிக்குத் தலைவனே! கன்னியாகுமரித் துறைக்கு அரசே!

அரியணைமேல் அமர்ந்து இருக்கும் பாண்டிய நாட்டு மன்னனே! செல்வம் போன்றவரே! எமது கடவுளே!

தொண்டர்கள் மனத்தினால் எண்ணியபோது விளையாடி வரும் கண்ணாடியில் தோன்றும் நல்ல கண்ணாடிப் பாவை (நிழல்) போல் அடியார்களுடன் ஒன்றாகச் சேர்ந்து விளையாடி வந்த தெய்வமே!

தேடுவதற்கு முடியாத அன்புடைய அடியார்கள் தேடிய நாளில் மனம் மகிழ்ந்து அவர்கள் முன்னே ஓடிவந்து புரிந்த(64) திருவிளையாடலை இனிமேல் காட்ட இயலாதோ?

திருவருளோடு முன்வந்து 'பழிக்கு அஞ்சி' என்று உலகத்தில் பரவும் புகழ் சேர்ந்த பொருத்தமான பெயர் இனிமேல் பெறவேண்டியது இல்லையோ?

ஆசையுடன் காண வந்தவர்மேல் சொக்கும் (மயக்கும்) பொடி போட்டு மயக்கியதுபோல் மயக்கியதால் **'சொக்கலிங்கம்'** என்று எவரும் உன்னைச் சொல்ல மாட்டாரோ?

கரும்பினை வில்லாக ஏந்தியுள்ள மன்மதன் தானே வந்து இளமையான ஒரு பெண்ணைத் துன்புறுத்திக் காம ஆட்சியைச் செலுத்தவும் இளமையான ஒரு பெண்ணைத் துன்புறுத்தி மயக்கம் கொள்ளச் செய்தல் வலிமை ஆகுமோ?

## தலைவியின் துயர்

256. - கங்கைஎலாம்

264. வல்லாய் உன்போல் எவர்க்கு வாய்க்குமே.

கங்கை ஆற்று நீரெல்லாம் நல்ல மை அணிந்த கண்களின் வழியே வருமாறு நீ அருள்புரிந்தால் இப்பெண், எல்லாம் வல்ல சித்தர் என்று உன்னை அழைக்க மாட்டாளோ?

நல்லவர் போல் நடித்து மை அணிந்த நீலமலர் போன்ற கண்ணை உடையவளின் வளையலைக் கவர்ந்து சென்று, மற்றைய பெண்களுக்கு உரிய வளையலாகக் கொண்டு போய் விற்பது முறையாகுமோ? முறையாகாது.

எட்டுத்திசையாக வளைந்த தோள்மேல் அணிந்த மாலையும் வேப்பமாலையாகி (கைப்பு மாலையாகி) அம்மாலையைத் தொடர்ந்து கேட்டவர்களும் வேம்பு போலாகி வெறுக்கும்படி கேட்டோம்.

கண்ணில் பொருந்துமாறு மன்மதனை எரித்த உனக்கு இது தகுமோ? இது தகாது. பெண்களின் ஆடையைக் கவரும் தொழில் உனக்குக் காளை வாகனமாக வந்த திருமாலிடத்து இருந்து கற்றதோ?

மீண்டு வராமல் சென்று தங்கிய நாரை அன்று சென்று அடைந்த சிவலோகத்தே இன்று என்னைச் சேரவிடல் ஆகாதோ?

தீ மலையாய் நின்றவனே! விருத்தர், குமாரர், இளம்பாலகர் என்று வடிவம் மாறி, ஒரு பெண் வீட்டில் தனியே இருந்தாய்!

முன் ஒருநாளில் பொன் போன்றவள் (திருப்பூவணம் - பரத்தை) வீட்டிற்குள் நுழைந்து தங்கி இருக்கலாம் என்றால், பொன் போன்றவளான எனக்குரிய வீட்டிற்கு நீ வருவது பொருந்தாதோ? (பொருந்தும்.) - என்று கூறும் சொற்கள் எல்லாம் எல்லாக் காதுகளிலும் சென்று சேரும்படி சொல்ல வல்லமை உடையாய்.

உன்னைப் போன்று எடுத்துரைக்கும் சொல்லாற்றல் வேறு எவர்க்குக் கிடைக்கும்? இத்தகைய வாய்ப்பு ஒருவர்க்கும் கிடைக்காது அல்லவா?

## சென்று மீண்டு வருக!

264. - நல்லாள்

265. கருணை விழியாள் அங்கயற்கண்ணி தன்னோடு ...

268. மறவாதே தூதுசொல்லி வா.

நல்லவளும் திருவருள் விழி உடையவளும் ஆகிய கயல் போன்ற கண்களை உடைய மீனாட்சி யோடு அடியார்களுக்குத் திருவருள் செய்வதற்காக மதுரையில் வாழ்ந்து இருக்கும் தலைவர் இருக்கும் மதுரையே சிவராசதானி (சிவபெருமான் அரசு புரிந்த

தலைநகரம்) என்று கருதி வீற்றிருந்தால், அது நாம் செய்த புண்ணியத்தின் செயலே ஆகும்.

ஆதலால் சுவர்க்கத்தினும் மேலான மதுரை சுந்தர பாண்டியன் (சொக்கநாதர்) உன்சொற்படியே வந்து என்னை விட்டுப் பிரியாது இருந்து கூடிக் கலந்து இன்ப மகிழ்ச்சியை (சுக ஆனந்தம்) எனக்குக் கொடுக்குமாறு என்னை மறவாமல் எனக்குரிய தூது சொல்லி மீண்டு வருக!

என்று தலைவி கூறினாள்.

★★★

# அருஞ் சொல்பொருள் விளக்கம்

1. **சீர்** = சிறப்பு; மதுரைக்கு வழங்கும் வேறு பெயர்கள்: கூடல், சிவராசதானிபுரம், ஆலவாய்.

   **ஏர்** = அழகு

2. **ஏத்துதல்** = புகழ்தல்; நசை=விருப்பம்

   மின் - மின்னலை ஒத்த இடையை உடைய தடாதகைப் பிராட்டியார்.

3. **திரள்** - தொகுதி

4. **புரந்து** - பாதுகாத்து. படைவேள் - முருகன்

5. **அன்னை** - உமை.

6. **மூன்றுவிழியார்** - நெற்றிக்கண்ணும் உடைய சிவபெருமான்.

   **அயன்** - பிரமன்; **மால்** - திருமால்

7. **பாடி** - செய்யுள்பாடி; **நாடி** - ஆராய்ந்து

8. **மட்டு** - தேன்; **ஓலைப்பூ** - தாழம்பூ

   **வனையார்** - சூடிக்கொள்ளாதவர்.

**வார்ந்த** - நீளமான

**பட்டோலை** - குறிப்பு எழுதும் ஓலை.

**முட்டாதே** - தடைபடாமல்

**ஒல்கா** - ஒல்காத - குறையாத

9. **தமிழ் மூன்று** - முத்தமிழ் (இயல், இசை, கூத்து)

**மாமுனி** - அகத்தியர்

**தொல்முனி** - தொல்காப்பியர்

**மல்கா** - குறையாத.

10. **பா திரம்** - பாக்களின் நிலை

**பதி** - இறைவன் (சிவபெருமான்)

**பசு** - ஆன்மா (உயிர்); **பிணித்த** - கட்டிய

**நேத்திரம்** - விழி = கண்.

11. **தீது** - குற்றம்; **ஆதிமுனிவர்** - திருமாளிகைத் தேவர் முதலான ஒன்பது முனிவர்கள்.

திருவிசைப்பா, திருப்பல்லாண்டு பாடிய ஒன்பதுபேர்.

திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், காடவர்கோன் பூந்துருத்திநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலி அமுதனார், புருசோத்தம நம்பி, சேதிராயர் ஆகிய ஒன்பதுபேர்.

12. **தந்திரம்** - நூல், சூழ்ச்சி

**சாற்று** - கூறிய (இயற்றிய)

**வல்லோர்** - திருமூலர்

13. **சங்கத்து மேலோர்** - சங்கப்புலவர்கள்

14. **கழறிற்று** - மற்றவர் கூறியது.

**கழறிற்று அறிவார்** - சேரமான் பெருமாள் நாயனார்.

**பாடஅரும்** - எளிதில் பாடமுடியாத

**தெய்வமொழிப்பாவலர்** - திருவள்ளுவர்.

**நாடஅரும்** - ஆராய்வதற்கு அருமையான (இயலாத)

15. **சொல் ஆரும்** - புகழ்ச்சொற்கள் நிறைந்த

16. **ஏத்துதல்** - துதித்தல், வழிபடுதல்

**இடர்** - துன்பம் (பிறவித்துன்பம்)

**புகலா** - புகலிடமாக (பற்றுக்கோடாக)

**போற்றினேன்** - துதித்தேன்;

**பன்னிய** - நெருங்கிய.

17. **கீண்டு** - கிழிந்து; **எஞ்சி** - குறைந்து

**விஞ்சு** - மிகுந்த

18. **சொல்ஏர் உழவர்** - புலவர்.

**வீயாது** - நீங்காது

19. **குலம் ஐந்து** - ஐ வகைப்பாக்கள்; வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா

**இருநிலம்** - பெரிய நிலம்

20. **உந்திப்புலம்** - கொப்பூழ் இடம்.
(பேச்சு வழக்கில் தொப்புள் என்பர்)

**வளி** - காற்று; **தரித்து** - தங்கி; **நண்ணி** - பொருந்தி

21. **மிடறு** - கழுத்து; **உரம்** - மார்பு, **இதழ்** - உதடு,

**தந்தம்** - பல்.

**உலைவுஇலா** - கெடாத, **அண்ணம்** - மேல்வாய்

22. முதலெழுத்து முப்பது.

உயிர் - 12; மெய் - 18; = 30.

உயிர்மெய் - 216, உயிர் அளபெடை - 7, ஒற்றளபெடை-11, குற்றியலிகரம்-1, குற்றியலுகரம்-1, ஆய்தம்-1, ஐகாரக் குறுக்கம்-1, ஔகாரக் குறுக்கம்-1, மகரக் குறுக்கம்-1. மொத்தம் = 240.

23. எண் முதலாகச் சொல்லப்படும் ஈராறு (இரண்டு X ஆறு = 12) அவை: எண், பெயர், முறை, பிறப்பு, உருவம், மாத்திரை, முதல்நிலை (பகுதி), இறுதி

நிலை(விகுதி), இடைநிலை, போலி, சொல், புணர்ச்சி என்பன.

**மண் முதலோர்** - மண்ணுலகத்தில் தோன்றிய முதன்மையானவர்(புலவர்)

24. **அசை** - ஏட்டுச் சுவடிகளைத் தூக்கும் பலகை.

**சிறார்** - சிறுவர்

**தால்** - நாக்கு;

**தாலாட்டு** - நாவினை அசைத்துப் பாடும் பாட்டு

**உள் இலகு** - உள்ளிடம் விளங்கும்படியாக.

25. **முப்பால்** - அறம், பொருள், இன்பம்

- இவற்றைக் கூறும் திருக்குறளும் ஆம்.

**முப்பால்**-தாய்ப்பால், பசுப்பால், ஆட்டுப்பால்.

**மிஞ்ச** - மிகுதியாக

**மஞ்சர்** - மைந்தர்

26. **பன்னி** - சொல்லி, கூறி, வகுத்து.

பிள்ளைத் தமிழ் பத்துப் பருவங்களை உடையது.

**ஆண்பால் பிள்ளைத்தமிழ்**: காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், அம்புலி, வருகை, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்பன.

**பெண்பால் பிள்ளைத் தமிழ்**: காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், அம்புலி, வருகை, அம்மானை, ஊசல், நீராடல் என்பன.

**முன்னே** - முதலில்.

27. **புனைதரு** - அழகுபடுத்திப் பாடும்.

28. **செய்யுள் சொல் நான்கு**: இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்பன.

**செந்தமிழ்ச்சொல் நான்கு**: பெயர்ச்சொல், வினைச் சொல், இடைச்சொல், உரிச்சொல் என்பன.

**அகத்திணை ஏழு**: கைக்கிளை, குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல், பெருந்திணை.

**புறத்திணை ஏழு**: வெட்சி, காஞ்சி, வஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை, வாகை.

**மை இல்** - குற்றம் இல்லாத

29. **யாப்பு எட்டு** - செய்யுளின் உறுப்புகள் எட்டு

**அவை**: எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை, ஓசை, இனம்.

**அலங்காரம் ஏழ் ஐந்து**: அணி வகைகள் = 35

தன்மை அணிமுதல் பாவிக அணி இறுதியாக **தண்டி அலங்காரம்** என்னும் இலக்கண நூலில் கூறப்பட்டுள்ள முப்பத்தைந்து அணிகள்.

**பேதியா** - வேறுபட்டு; **எழில்** - அழகு.

30. **செப்பல் பண்** - செப்பலோசை (வெண்பா)

**அகவல் பண்** - அகவலோசை (அகவல் பா)

**துள்ளல் பண்** - துள்ளல் ஓசை (கலிப்பா)

**தூங்கல் பண்** - தூங்கலோசை (வஞ்சிப்பா)

31. **எண்** - எண்ணத்தக்க (உயர்வாக மதிக்கத் தக்க)

**கருவி ஐந்து** - தோல்கருவி, துளைக்கருவி, நரம்புக் கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி (வாய்ப்பாட்டு).

**எண்கொளும்** - எண்ணத்தக்க (உயர்வாக மதிக்கப்பெற்ற)

32. **நல்தார மாய்** - நல்ல ஆதாரமாய் (ஆதரவால்)

**நவரசம்** - ஒன்பது சுவை:
வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், சினம், நகை, சாந்தம் என்பன.

**பெருவாழ்வு** - பெருமை + வாழ்வு.
சிறந்த நல்வாழ்க்கை.

**உற்று அகலா**-பொருந்தி உன்னைவிட்டு நீங்காத

33. **பாலர்** - பிள்ளைகள்.

**மண்** - உலகம்; உலகத்தோர்.

34. **அட்டதசம்** - பதினெட்டு. **அட்டம்** - எட்டு;

**தசம்** - பத்து

**வன்னனை** - வருணனை.

**ஆழ்** - ஆழமான.

**பதினெட்டு வருணனை:**

மலை, கடல், நாடு, நகர், பெரும்பொழுது-6, சிறுபொழுது-6, சூரியன், சந்திரன்-ஆகிய பதினெட்டைப் பற்றி அழகுபடுத்திப் பாடுதல்.

**பெரும்பொழுது ஆறு:** கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில்.

**சிறுபொழுது ஆறு:** மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு.

35. **கோலம்** - அழகு; **நேசர்** - அன்புடையவர்.

**கொடுங்கோல்** - கொடிய பிரம்படி.

**பத்து திசைகள்:** வடக்கு, வடகிழக்கு, கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, மேல், கீழ் என்பன.

37. **தேசம் ஐம்பத்தாறு** - ஒரு காலத்தில் இந்த நாடு ஐம்பத்து ஆறு தேசங்களாகப் பிரிக்கப்பட்டு இருந்தது.

திசைச் சொல் பதினேழு-தமிழ்பேசும் நாட்டைச் சார்ந்த வெளிப்பகுதிகள் பதினேழு என்பர்.

அவை: சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளு, குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கவுடம், கடாரம், குச்லம்- என்பன. (நன்னூல் 273. காண்டிகை உரை)

**38. குடகடல்-மேற்குக் கடல்**

கோகுமரி - தலைமைவாய்ந்த தென்குமரியாறு
வடவரை - வடவேங்கடமலை (திருப்பதி)

**39. பன்னிரண்டு நாடு**

"தென்பாண்டி குட்டம் குடம் கற்கா வேண்பூழி
பன்றி அருவா அதன்வடக்கு - நன்றாய -
சீதமலாடு புனல்நாடு செந்தமிழ்சேர்
ஏதம் இல் பன்னிருநாட்டு எண்."

**(நன்னூல் 273-இன் உரை)**

**40. கருவை - கருவூர்**

நடுவே-வையை ஆற்றின் வடக்கும் கருவூரின் கிழக்கும் மருத ஆற்றின் தெற்கும் மருவூரின் மேற்கும் ஆகிய எல்லைக்குள் அடங்கிய நடுஇடத்தே.

**41. மூவேந்தர்** - சேர, சோழ, பாண்டியர்
**மூவுலகு** - விண், மண், பாதலம்

**வளைந்த** - சுற்றிவந்த

**பார்வேந்தோ** - இந்நிலவுலக வேந்தனோ?

42. **விண்ணவர்** - வான் உலகில் உள்ள தேவர்கள்

வேத ஆகமங்கள் - வேதம் ஆகமங்கள்

**வேதம்:**-இருக்கு, எசூர், சாமம், அதர்வணம் என்ற நான்கு.

**ஆகமங்கள்:** காமிகம் முதலாக வாதுளம் இறுதியாக உள்ள இருபத்தெட்டு.

**எண்ண அரிய** - எண்ண முடியாத(அளவற்ற)

43. **தொல் உலகு** - தொன்மை+உலகு. பழைமையான இவ்வுலகு.

44. **சார்புரக்கும்** - சார்ந்தவர்களைப் பாதுகாக்கும்.

கோ-அரசன்,சாத்திரம்-நூல்

பார்-மண்,இவ்வுலகு.

45. **அதிர்போர்**-நடுங்கத் தக்கபோர்

46. **அக்கரம்** - எழுத்து

**அக்கரவர்த்தி** - எழுத்துகளின் வழிவருவோன்.

**அக்கரவர்த்தி** - அக்கரவர்த்தனம் என்னும் சொல்லணிப் பாடலில் சித்திரகவியில் நீ நிற்கிறாய்.

47. **முன்புஏந்தி** - சித்திரப்பாடல்களில் வைத்த முறைப்படி ஏந்தப்பட்டு.

நெடுமை+தேர் - நெடுந்தேர்.

தேர்-இரதபந்தம் என்னும் சொல்லணி. தேர் வடிவில் உள்ள கட்டங்களில் எழுத்துகளை அமைத்துப் பாடும் பாடலின் சொல்லழகு.

**சுழிகுளம்** - நீர் சுழலுகின்றகுளம். குளம் வடிவில் எழுத்துகளை அமைத்துப்பாடும் ஒரு சொல்லணி.

**சதுக்கம்** - நாற்சந்தி. போந்து - வந்து

48. கூடசதுக்கம், மாலைமாற்று, சதுரங்கபந்தம், முரசபந்தம் ஆகிய நான்கும் சொல்லணி (சித்திரகவி)கள். அணிகளின் விளக்கத்தைத் தண்டியலங்காரம் என்னும் இலக்கணநூலில் 98ஆம் நூற்பாவில் காண்க.

**நூற்பா:**

**"கோமூத் திரியே கூட சதுக்கம்**
**மாலை மாற்றே எழுத்து வருத்தனம்**
**நாக பந்தம் வினாவுத் தரமே**
**காதை கரப்பே கரந்துறைச் செய்யுள்**
**சக்கரம் சுழிகுளம் சருப்பதோ பத்திரம்**
**அக்கரச் சுதகமும் அவற்றின் பால."** **-98.**

**சதுரங்க சேனை** - நால்வகைப்படை (யானை, குதிரை, தேர், காலாள்)

**தயங்க** - விளங்க **சதுராய்**-நலமாக.

49. **முரசம் கறங்க** - பேரிகை ஒலிக்க.

**வரசங்கம்** - வரம்சங்கம் = மேன்மை பொருந்திய சங்கப்பலகை.

**50. மூவர்** - ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர்
அவை - அப்பதிகங்கள்
**வாதவூர்ஆளி** - திருவாதவூரில் பிறந்து நம்மை ஆட்கொண்டவர் (மாணிக்கவாசகர்)
சொல்லும் - திருவாசகமும்.

**51. கூற்று** - மாணிக்கவாசகர் கூறிய சொல்.
**அரன்** - சிவபெருமான்
**கோவை** - திருக்கோவையார் என்னும் நூல்.
**கோது** - குற்றம், தாய்-காரைக்கால் அம்மையார்
**மாற்றுஆ(க)** - சிறந்த சொல் அமைத்துப்பாடிய
**மாற்று** - சொல்
**தேற்றம்** - தெளிவு, உற - பொருந்த.

**52. பற்று**-ஆசை,துணை.

பஞ்சகாப்பியம்-ஐம்பெருங்காப்பியம்.
(சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி)

கொற்றவர்-அரசர்.

**53. வன்னனை** - வருணனை; சிறப்பு, புகழ்ச்சி, புனைந்துரை.

**ஈர்ஒன்பது** - இரண்டு × ஒன்பது =18.

நாடு, நகர் முதலிய பதினெட்டுவகைச் சிறப்புகள். இந்நூலின் கண்ணி 34ஐப் பார்க்க.

**கண்ணியம்** - பெருமை

**நண்ணி** - அடைந்து

54. **அம்பலத்தான்**-தில்லையம்பலக்கூத்தன் (நடராசன்)

**அன்புஉறு** - அன்புற்ற

**முன்பு** - அரங்கேற்றுவதற்கு முன்னரே.

**அவர்சொல்** - சேரமான் பெருமாள் நாயனார் பாடிய

55. **கோத்து** - பாமாலையாகக் கோத்து (சேர்த்து)

**மும்மணிக் கோவை** - திருவாரூர் மும்மணிக் கோவை என்றநூல்.

56. **பத்துப்பாட்டு:-** திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பன.

**எட்டுத்தொகை:-** நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு.

எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் பதினெண் மேற்கணக்கு என்பர்.

**கேடு இல்** - கெடுதல் இல்லாத

**பதினெண்கீழ்க்கணக்கு**:- நாலடியார், நான்மணிக் கடிகை, இன்னாநாற்பது, இனியவை நாற்பது, கார்நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணை எழுபது, ஐந்திணை ஐம்பது, திணைமொழி ஐம்பது, திணை மாலை நூற்றைம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், முதுமொழிக்காஞ்சி, ஏலாதி, கைந் நிலை.

57. **மாவெற்பு**-பெரியமலை, **ஆடகம்**-ஆடகப் பொன், தங்கத்தில் ஒருவகை.

**மாதை** - திருவாமாத்தூர்

**விமலர்** - மலமற்றவர்(சிவபெருமான்)

**இருவர்** - இரட்டைப் புலவர்

**முற்படை** - முன்னால்செல்லும் தூசிப்படை.

58. **ஆடல்** - ஆடலால் போர் புரிந்து

**கலிங்கம்** - கலிங்க நாடு

**பாடற்கு அரிய** - எளிதில் பாடமுடியாத

**பரணி** - கலிங்கத்துப் பரணி

(ஆயிரம் யானைகளைப் போரில் கொன்று வெற்றி பெற்ற தலைவன்மீது பாடுவது பரணி என்னும் நூலாகும்)

''யானை ஆயிரம் அமரிடையட்ட
மானவனுக்கு வகுப்பது பரணி''

இதுவே பரணியின் இலக்கணமாகும்.

**கூடல்** - புகார், காவிரிப்பூம்பட்டினம்.

59. **நராதிபன்** - நர+அதிபன்-மக்கள் தலைவன்

**கூத்தன்** - ஒட்டக்கூத்தன்

**எதிர் நண்ணி** - எதிரில் அமர்ந்து

**கண்ணி** - இரண்டு வரிப்பாடல்

தமிழ்விடுதூது என்னும் இந்நூலில் 268 கண்ணிகள் உள்ளன.

**பராவும்** - அனைவரும் துதிக்கும்

60. **பேராத** - இருக்கும் இடத்தை விட்டுப் பெயராத; நிலைத்த.

**குரவர்** - சான்றோர்.

**வெள்ளம்** - ஒரு பேரெண்.

61. **வீரியம் செய்து** - மனத்துள் வீரம் நிறையப்பெற்று

**வினை** - தீவினை

**ராசகாரியம்** - அரசர்க்குரிய செயல்

**பாரில்** - இவ்வுலகில்

**62. அரி ஆசனம்**-சிங்காதனம், சிங்கவடிவில் அமைக்கப் பெற்றது.

அரிந்த பனை ஓலையாகிய எழுத்துகள் அழகும் சிங்காதனம்.

**சரியாரும்** - சமமானவர் யாராகிலும்

**விரிவுஆர்** - விரிந்து நிறைந்த

**63. பா ஒருநான்கு** - நால்வகைப் பாக்கள் (வெண்பா, அகவல்பா, கலிப்பா, வஞ்சிப்பா)

பா வினம் - துறை, தாழிசை, விருத்தம் என்பன.

64. **ஏர்** - அழகு.

**நால்கரணம்** - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன

**சொல்ஏர்உழவர்** - புலவர்(சொல்லையே ஏராகக் கொண்டு ஏட்டில் உழுபவர்)

**ஈண்டி** - நெருங்கி நின்று

**65. நெறி நாலே** - நான்குநெறிகள்

அவை வைதருப்பம், கௌடம், பாஞ்சாலம், மாகதம் என்ற நான்கு நெறிகள்.

**நாற்பொருள்** - அறம்,பொருள்,இன்பம்,வீடு.

**மேலே பலன்பெற** - மேலே விளைவிக்கும்

**மேலோரில்** - அரசர்களுள்

66. **பா தனதா கொண்ட** - பாக்கள் பாடுவதையே தன் தொழிலாகக் கொண்ட

**பிள்ளைப்பாண்டியன்** - அதிவீரராம பாண்டியன்

**கோட்டி கொளும்** - புலவர் எனப்பேர் சொல்லிக் கொண்டு சான்றோர் அவையில் சென்று பங்கு கொள்ளும்

**கோட்டி** - கூட்டம்

**கோட்டி** - ஆழ்ந்த புலமையில்லாதவர் சான்றோர் அவையில் சென்று பங்குகொள்ளுதல்

**சீத்தையர்** - கீழ்மக்கள்

67. **தலைகள் கூட்டி**-தலைகளை எல்லாம் ஒன்றாகச் சேர்த்துக்கட்டி

**களை** - போலிப் புலவர்களாகிய களைகளை

**தூர்கட்டி** - அடிப்பக்கம் பருத்து (தமிழ்ப்பயிருக்கு அகன்று பரந்து விரிந்து)

68. **முந்திரிகை** - முந்திரிப்பழம்

**கிளர்ந்த** - பக்கங்களில் கிளைவிட்டுப் பரந்து வளர்ந்த

**நாளிகேரம்** - தென்னை

**இளங்கனி** - முற்றாதகாய்.

பால், முந்திரிப்பழம், வாழைப்பழம், கரும்பு, தேங்காய்- இவை செய்யுளைப் படித்துச் சுவைக்கும் பான்மைக்கு உவமைகளாக வந்துள்ளன.

பாலை அப்படியே குடிப்பதைப்போலச் செய்யுளை ஆற்று ஒழுக்காக எளிதில் படிக்கலாம்.

முந்திரிப்பழம் சுவைப்பதுபோலச் சிறிதுசிறிதாக ஆராய்ந்து பொருள் காணும் இயல்பு உடையன சில பாக்கள். வாழைப்பழத்தைத்தோல் உரித்துச் சாப்பிடுவதைப் போலப் பயன்படுவது ஒருவகை.

கரும்பு கடித்துச் சுவைக்கப் பயன்கொடுப்பதைப் போலச் சொற்களைப் பிரித்துப் பொருத்தி ஆராய்ந்து பொருள்காண முயல்வது ஒருவகை.

இவ்வாறான இயல்புடைய செய்யுளைப் படித்துச் சுவைக்கும் தன்மையை வடமொழி நூலார் க்ஷீரபாகம், திராட்சாபாகம், கதலீபாகம், இட்சுபாகம், நாளிகேர பாகம் என்று கூறுவர்.

69. **தெள்அமுதாய்** - தெளிந்த அமுதமாய்

**புத்திக்குள்** - அறிவால்

70. **விண்ணப்பம்** - வேண்டுகோள்.

71. **குறம், பள்**- குறவர், பள்ளர் என்று குலத்தையும் உணர்த்தும். பள் - பள்ளு என்ற நூல்.

72. **நா சிந்தும்** - நாவானது கெடும்.

**அந்தரம்** - வானம்

73. **பத்துக் குற்றங்கள்:**

குன்றக்கூறல், மிகைபடக்கூறல், கூறியதுகூறல், மாறுகொளக்கூறல், வழூஉச்சொல் புணர்த்தல், மயங்க வைத்தல், வெற்றெனத் தொடுத்தல், மற்றொன்று விரித்தல், சென்று தேய்ந்து இறுதல், நின்று பயனின்மை - ஆகியவை *(நன்னூல்-12)*

**பத்துக் குணங்கள்** (பத்து அழகுகள்)

சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல், நவின்றோர்க்கு இனிமை, நன்மொழி புணர்த்தல், ஓசை உடைமை, ஆழம் உடைத்து ஆதல், முறையின் வைப்பு, உலகம் மலையாமை, விழுமியது பயத்தல், விளங்கு உதாரணத்தது ஆகுதல்-ஆகியவை.

*(நன்னூல்-13)*

74. **நூறு வண்ணங்கள்** - தமிழுக்கு நூறு வண்ணங்கள் உள்ளன. விளக்கம் யாப்பருங்கலக்காரிகை 58-ஆம் நூல்பாவில் காண்க.

**நாக்குலவும்** - நா குலவும்; நாக்கு உலவும். (இரண்டிற்கும் பொருள் ஒன்றே)

**நாக்குலவும்** - நாக்கிலே உலவும்.

75. **ஊனரசம்** - குறைபாடு உடைய சுவை.

நாச்சுவை சிறிதுநேரம் இருந்து மறையும். காதால் கேட்டு உணரும் செவிச்சுவை என்றும் நிலைத்து பயனைக் கொடுக்கும்.

**அறுசுவை:** கசப்பு, புளிப்பு, காரம், துவர்ப்பு, உப்பு, இனிப்பு.

**நவரசம்** - ஒன்பது சுவை. கண்ணி-32இல் பார்க்க.

**ஏனையோர்** - மற்றையோர்(தமிழ் அடையப் பெறாத மற்றையோர், மனிதர், தேவர், நரகர் முதலானோர்)

76. **வனப்பு** - அழகு; வனப்பு எட்டு

''அம்மை, அழகு, தொன்மை, தோலே,

விருந்தே, இயைபே, புலனே, இழைபு''- என எட்டு ஆகும்.(தொல்.செய்-1)

''அம்மை.....தோலே,
விருந்தே....இழைபு''

என எட்டு ஆகும். (தொல் - செய்.1.)

**பெ ழிவேந்தர்** - மொழியப்படும் வேந்தர்; எல்லோரா ம் பாராட்டப்படும் அரசர்.

77. **பொரு கோள்** - பொருள் கொள்ளும் முறை. அரசர்க்குப் பெ ள் கைப்பற்றும் முறை மூன்று.

**உறுபொருள்:** சொத்துக்கு உடையவர் (வாரிசு) இல்லாமையால் தானே வந்து சேரும் பொருள்.

**உல்குபொருள்:** (ஏற்றுமதி, இறக்குமதி) சுங்கவரி

**ஒன்னார்த் தெறு பொருள்:** பகைவரை வென்று கைப்பற்றிய பொருள்.

"உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்" (திருக்குறள்-756)

பாடலில் பொருள் கொள்ளும் முறை எட்டு:

(பொருள்கோள் எட்டு)

ஆற்றுநீர், மொழிமாற்று, நிரல்நிறை, பூட்டுவில், தாப்பிசை, அளைமறிபாப் (ம்)பு, கொண்டு கூட்டு, அடிமறிமாற்று என்பன.

78. **முப்பால்** - அறம், பொருள், இன்பம் கூறும் திருக்குறள்

**ஐம்பால்** - ஆண், பெண், பலர், ஒன்று, பல.

**சீர்** - சிறப்பு, பாடலில் அமைந்துள்ள சீர்.

**சீர் முப்பது:** ஓரசைச்சீர் 2, ஈரசைச்சீர் 4, மூவசைச்சீர் 8, நாலசைச்சீர் 16, மொத்தம் - 30.

79. **அடிக்கு அண்டு** - காலில் பொருந்திய

**தளை விடுத்தாய்** - கால் தளையை (சங்கிலியை) நீக்கினாய்.

**ஏழ்தளை:** ஆசிரியத்தளை 2, வெண்டளை 2, கலித்தளை 1, வஞ்சித்தளை 2 = 7

80. **திண் பாவலர்** - அறிவில் வல்ல புலவர்.

**வெண்பா** - பாவகையுள் ஒன்று ( வெள்ளிய அறிவுடைய பாட்டு)

**ஓதுவது** - கூறுவது.

**ஏர்** - அழகு.

81. **உவப்பு இல்** - கெடாத

82. **இருள்பா** - இருள் போன்று பரவிய

**மருள்** - மயக்கம்

**வழக்கோ** - வழக்கு ஆகுமோ?

**தெருள் பா** - தெளிவு தரும்பா (தெளிந்த பாடல்)

83. **பொருத்தம் ஒரு பத்து** - பத்து பொருத்தம்

(மங்கலம், சொல், எழுத்து, தானம், பால், உண்டி, வருணம், நாள், கதி, கணம் - இவையே பத்து பொருத்தமாகும்.)

**பொருந்தும்** - பொருந்தி நிற்கும்

**விருத்தம்** - பா இனத்தில் ஒன்று வேறுபாடு என்ற பொருளையும் தரும்.

**இருள்குவை** - உள்ளத்தில் உள்ள இருள் கூட்டம். இருள் - அறியாமை, அஞ்ஞான இருள்.

84. **முந்தி** - முதலில்

**முச்சுடர்** - மூன்று சுடர் - சூரியன், சந்திரன், தீ.

**சிந்தாமணி** - சிந்தித்தவர்க்கு உதவும் மணி.

தன்னை நினைப்பவர்க்கு நினைத்ததைக் கொடுக்கும் தன்மை உடையது.

85. **கொடை** - கொடுத்தல்.

**உன்பேர்** - உன்னுடைய பெயரினை (சிந்தாமணி என்ற நூல்)

**தணியும்** - தாழ்ந்து தொங்கும்.

86. **துலங்கு ஆரம்** - ஒளிவிளங்கும் மாலை.

**கண்டசரம்** - கண்டம் + சரம் - கழுத்தில் அணியும் அணி (மாலை)

**அலங்காரம்** - அழகு, தண்டியலங்காரம் என்னும் இலக்கண நூல்; நீ இதைப் பெற்றுள்ளாய்.

**புலம் காணும்** - அறிவைத்தரும்.

87. உன்னைப் பொருள் என்று சொல்லும் பொழுது எல்லாம் நீ வளர்வாய். பொன்னைப் பொருள் என்று சொல்லித் தேய்த்துப் பார்க்கும் பொழுது எல்லாம் குறையும்.

**கன்னம் இடல்** - சுவரில் துளையிட்டு உள்ளே நுழைந்து பொருளைத் திருடுதல்.

88. **மன்னர் கவர்ந்தும்** - அரசரால் தண்டனை மூலம் கவர்ந்தும்

**வளர்பொருளே** - வளரும் பொருள்களே

**கைப்பொருள்** - மக்கள் கையில் உள்ள பொருள்கள் எல்லாம்

**எய்தாவே** - அவை உன்னைப் போல் உறுதுணையாக வந்து உதவா.

**நன்னெறியின்** - நல்லொழுக்கமுடன்.

89. **புகழ் உருவாய்** - புகழைப் பெறுவதற்குரிய வடிவமாய்

**தேவு உருவாய்** - தெய்வ வடிவத்துடன்

**மேவுதற்கும்** - பொருந்தி இன்பத்தை அனுபவித்து வாழ்வதற்கும்

**எண்ணி** - ஆராய்ந்து.

90. **புகழ் கொண்டவர்க்கே** - புகழை அடைந்தவர்களுக்கே

**தென்பால்** - தெற்குத் திசையில்

91. **ஈங்கு** - இவ்வுலகில்

**பூ கமல** - கமலபூ - தாமரை மலர்.

92. **வாணி** - கலைமகள்

**ஆடு அரவு** - ஆடும் பாம்பு

93. **தாழ் பாயல்** - தாழ்வான படுக்கை ( பாம்புப் படுக்கை)

**பாயலாளர்** - படுக்கையாகக் கொண்ட திருமால்.

94. **முனி** - அகத்திய முனிவர்

**சோதி** - ஒளியே

**சொற்றனையோ** - சொன்னாயோ?

**பேதியா** - வேறுபடாத

95. **நேசர்** - அன்பர் (சிவபெருமான்)

**மதுரை வாசர்** - மதுரையில் வீற்றிருக்கும் சொக்க நாதர்.

**பாசம் உறும்** - மயக்கம் கொண்ட

96. **செய்தி** - செயலினை

97. –

98. **புத்தி இயம்பி** - அறிவுரை கூறி

**உரைக்க** - அறிவுரை கூற

99. **ஈரடி** - இரண்டு அடிகளால் ஆகிய திருக்குறள்

**நேரடிக்கு** - நேரடியாகிய நாலடிக்கு ( நாலடியார்)

100. **இறைக்கும்** - சிதறிய - சிந்திய - கொடுத்த

**ஐயரை** - தலைவனாகிய சிவபெருமானை

**இரந்து** - பரவை நாச்சியாரிடம் தூது செல்லுமாறு வேண்டி

**ஆய் இருந்தும்** - அவ்வாறு ஆகி இருந்தும்.

101. **வருத்தம்** - காம நோய் வருத்தம்

**காண்பாய்** - ஆராய்ந்து பார்

**காணாதே** - இதைப்பற்றி ஆராயாதே.

102. **வண்பதி** - வண்மை + பதி - வளமான நகர்.

103. **சென்மித்தாய்** - பிறந்தாய்

**மாட குல** - மாளிகை வரிசை உடைய

**தவ தியானத்தர்** - தவமும் தியானமும் உடையவர்.

104. **கண்டிகை** - (அக்கவடம்) உருத்திராக்க மாலை

**மானியார்** - மானம் உடையவர்; நாணம் உடையவர் (மங்கையார்க்கரசியார்)

**தேசிகனா** - ஆசிரியனாக

**ஞானியார்** - இசை ஞானியார் (சுந்தரமூர்த்தி நாயனாரின் அன்னை ஆவார்)

105. **துங்க மகவு** - உயர்வான குழந்தை

**வனப்பகை, சிங்கடி** - வனப்பகையார், சிங்கடியார், சுந்தரமூர்த்தி ந[illegible]ாருக்குக் குழந்தை

இல்லை. கோட்புலி நாயனாருடைய மக்களாகிய வனப்பகையார், சிங்கடியார் இருவரையும் வனப்பகையப்பன், சிங்கடியப்பன், எனத் தம் மக்களாகப் பாவனை செய்து பாடினார்.

106. **புண்கள்** - கவலைகள்; மாற - நீங்க

**புரிகண்டாய்** - புரிவாய், செய்வாய்

**ஒண்கமலம்** - ஒண்மை + கமலம் = ஒளிபொருந்திய தாமரை

107. **அங்கு அவரை** - அங்குள்ள சொக்கநாதரை

**மன்** - பொருந்திய

108. **அப்பால்** - அவ்விடத்திற்கு

**திகைக்கும்** - திகைத்துச் சொல்லாது.

**தப்பாது** - தவறாமல்

109. **வல்லியம்** - புலி

**பூம்தானை** - அழகிய ஆடை

**சாராதே** - நெருங்காமல் வந்துவிடும்

**ஏனை** - மற்றும்

110. **பூம் கோகிலம்** - அழகிய குயில்

**வலியான்** - கரிக்குருவி என்ற ஒரு வகைப்பறவை. அது பறவைகளை எல்லாம் அடித்துத் துரத்தும் வலிமை உடையது.

*111.* **மனோதீதர்** - மன+அதீதர்-மனத்தைக்கடந்தவர்.

**அண்டாதே** - அணுகாதே, நெருங்காதே.

*113.* **பண்ணிய** - முன்னோர் இயற்றிய

**தொடையாய்** - தொடைக்கு உரிமை உடையாய். தொடை செய்யுளுக்குரியது. எதுகை,மோனை முதலியவை.

**நண்ணி** - அடைந்து

*114.* **தொடை** - மாலை-சிவபெருமானின் கொன்றை மாலை

தூது செல்வோர் காதலரிடம் மாலை வாங்கி வந்தால் காதலர், காதலியிடம் வருவதற்கு உடன்பட்டார் என்பதைக் காதலிக்கு அறிவிப்பதாகும். மாலையைத் தந்த மன்னர்,மாலை சென்று சேர்ந்தவரிடத்து வருவதும் அக்கால வழக்கம். அன்றிரவே அவர் வர உடன்பட்டார் என்பதை மாலை கொடுத்ததால் காதலி அறிவாள். இரவு வரவை எதிர்நோக்கி இருப்பாள் காதலி.

**சே** - காளைமாடு

**விருது** - கொடி

*115.* **வாழ்க்கை வேண்டி** - இல்லற வாழ்க்கையை விரும்பி

**கிழி** - பொற்கிழி(பொன்முடிப்பு)

"கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத்தும்பி காமம்
செப்பாது கண்டது மொழிமோ..."

குறுந்தொகைப்பாடல்

இப்பாடலை இயற்றியவர் சொக்கநாதர். இதைத் திருவிளையாடல் புராணத்தில் காணலாம். கீரன்- நக்கீரன்

*116.* **இசையா வகையின்** - பொருந்தாத நிலையில்

**இயம்பினான்** - சொற்போர் புரிந்தான்

**வசையாடி** - இகழ்ந்துபேசி

**தர்க்கித்தவர்** - சொற்போர் புரிந்தவர்.

*117.* **பாணனுக்கு** - பாணபத்திரனுக்கு

**சீராட்டும்** - சிறப்புச்செயலும்

**பாட்டியலில்** - பாட்டின் இலக்கணத்தில்

*118.* **நா திரமா** - நாவிலே உறுதியாக

**மேவுபொருள்** - கூறப்படும் பொருள் இலக்கணத்தை, அறுபது எனும் சூத்திரமா- இறையனார் அகப்பொருள் என்னும் நூலில் உள்ள அறுபது சூத்திரங்களாக

**மாத்திரமோ** - இவைமட்டுமோ?

119. **ஒன்றோ** - ஒன்றுதானோ? பல உள்ளன.

**யார் வந்தார்** - வந்தவர் யார்? சொக்கநாதர் அல்லவா?

**மன்னவன்** - பாண்டியன்

120. **பகிர** - கவர்ந்து கொள்ள

காட்டு வழியில் காரியார், நாரியார் என்ற இரு புலவரும் சென்ற சமயத்தில் சொக்கநாதர் ஓர் இடையனாக வந்து வழிமறித்து அப்பாடல்களில் பாதியைத் தமக்குத் தருமாறு வேண்டிப்பிறகு மறைந்துவிட்டார் என்பது திருவிளையாடல் புராணக்கதை.

121. **நாரினொடும்** - அன்புடன்.

இறைவன் கிழ வடிவத்தில் தோன்றி விறகு சுமந்து விற்றார் - திருவிளையாடல் - விறகு விற்ற படலம்.

**தேற்றி அவற்கு** - தெளிவாக(தெளிவித்து) அப்பாண பத்திரனுக்கு

அவன்+கு=அவற்கு.

122. **ஈஅரிய** - ஒருவராலும் கொடுக்க முடியாத

**பொன்பலகை** - சங்கப் பலகை

**அவன்** - அப்பாணபத்திரன்

**நேய** - அன்புடைய

**மனைவிக்கு** - மனைவியாகிய விறலிக்கு

*123.* **தள்ளி** - நீக்கி

**தாபிக்கத் தக்கவர்**-இசையில் வென்று வெற்றியைப் பாணபத்திரன் மனைவிக்கே நிலைக்கச் செய்தவர்.

**உள் இருந்த சொக்கர்** - மதுரைக் கோயிலின் உள்ளே இருந்த சொக்கநாதர்.

**உனக்குள் அன்றோ**-உனக்குள்ளாக இருக்கின்றார் என்பது உண்மையாகும் அல்லவா?

**எள்ளி** - தமிழ்மொழியை இகழ்ந்து

*124.* **திடமொழி** - உறுதியான மொழி.

**அடரும்** - அழிக்கின்ற

*125.* **பரசமயம்** - வேற்றுமதங்கள்

**கோள்அரி** - அழிக்கின்ற சிங்கம் - (ஞானசம்பந்தர்)

**அரன்**- சிவன், **அரசமயம்** - சைவசமயம்.

**விரசு** - விரைவாக.

*126.* **ஆதிக்கண்**-முதலில், **வேதஆகமம்**-மறையாகிய சைவ சமயத்தைப் பற்றிக் கூறிய திருமுகப்பாசுரம்.

**தாபித்தாய்** - நிலைநிறுத்தினாய்

**சோதிக்கின்** - ஆராய்ந்துபார்த்தால்

**ஏடகம்** - ஏடு+அகம் - ஏடுநின்ற இடம்.

வையை ஆற்றில் சமணர்களுடன் திருஞான சம்பந்தர் சொற்போர் புரிந்து முடிவில் ஆற்றில் விட்ட ஏடு நீரோடு செல்லாது எதிர்த்திசையில் ஏறிச் சென்று தங்கிய இடம் ஏடகம்.

ஏடகமே தமிழ்மொழியாகிய உன் சிறப்பினைக் கூறும்

**வேதத்தேவு** - வேதமாகிய தெய்வம்.

127. **ஆதவன்** - சூரியன்

**அண்டாது**-நெருங்காமல்,சூரிய ஒளி நுழையாமல்

வடமொழி மறையால் அடைக்கப்பட்டிருந்த கதவு, திருமறைக் காட்டுக் கோயிலில் தமிழ்மொழி யாகிய உன்பாடலால் திறக்கப்பட்டது.

**வேத வனம்** - திருமறைக்காடு என்னும் ஊர் (வேதாரண்யம்)

**கண்டால்** - அங்குள்ள கோயிலைப் பார்த்தால்

**விளம்பாதோ** - அதுவே கூறாதோ?

128. **மிக்கு** - இனிமை மிக்கது

**முனிக்கு** - வடமொழியைக் கற்ற அகத்திய முனிவர்க்கு

**அன்பர்** - என் அன்பராகிய சொக்கநாதர்

**உனை** - உன்னை-(தமிழ்மொழியை)

**சொன்னார்** - கற்பித்தார்.

அகத்திய முனிவர் சிவபெருமானை வேண்டவே, அவர் முருகக் கடவுளிடம் தமிழைக் கற்பாய் என்றுகூற அவ்வாறே அகத்தியர் சிவபெருமானின் கட்டளைப்படி முருகனிடம் தமிழ்கற்று உணர்ந்தார்.

**தாராதோ** - அறிவிக்காதோ?

129. **ஆரணர்** - மறைநூலாம் திருக்குறளை ஆக்கியவராகிய திருவள்ளுவர்

**சொன்னார்** - பாடினார்

**அத்திறம்** - அச்செயலை

**வாக்கே** - பாடிய பாடலே

130. **கற்பு அலகை** - கல்வியின் அளவை எல்லாம்

**நீ** - தமிழாகிய நீ.

**போதாயோ** - இஃது ஒன்றே போதாதோ?

**தற்பரர்** - சிவபெருமான்.

131. **எண் இறந்த வாசி** - அளவற்ற நரியாகிய குதிரை

**சதுர்வேதம்** - நான்குமறை (நான்கு வேதங்களும் குதிரைகளாக வந்தன என்பர்)

132. **தென்பால் உகந்து**-தென்திசையை விரும்பி வந்து

133. **பழி ஆர்** - பழிநிறைந்த

**திசைசொல்லார்** -வேறு திசைச்சொல் பேசுவோர்

**பன்னார்** - சொல்லமாட்டார்.

**தமிழ்** - ழகரத்தை அழுத்தம் திருத்தமாகச் சொல்ல மாட்டார்கள்.

**திருவாய்மொழி** -நாலாயிரத்திவ்யப் பிரபந்தம்.

நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தை வேதம் என ஓதும் வைணவர் மணிப்பிரவாள நடை உடைய பெரிய வாச்சான் பிள்ளை வியாக்கியானம் முதலிய உரை நடையைப் பயில்வர். ஆதலினால் திருத்தமாகப் பேசி அறியாமல் குழறிக் குழறிப் பேசுவர்.

134. **ஓத அரிய** - துதிப்பதற்கு முடியாத

**முத்தி** - முத்தியைத் தரும்.

**ஒரு மால்** - ஒப்பற்ற திருமால்.

135. **தடமதுரை** - பெரிய மதுரை

**மீன்** - மீனக்கொடி

**தாணு** - (சிவன்) சுந்தர பாண்டியரும்

**படர்** - துன்பம்.

இறைவன் சுந்தரபாண்டியனாக வந்து அரசாட்சி நடத்தியபொழுது திருமால் மதுரையை விரும்பி, மீன் (மச்ச) வடிவமாக வந்தார் என்று புகழ்ந்து கூறும்படி தோன்றியது.

மீனக்கொடி என்பது கருத்தாகும்.

136. **சத்தி**-உமை; **புரத்துஓர்பால்** - உடம்பின் ஒரு பகுதியில்

**சீவன்முத்திபுரம்** - மதுரை (மதுரையில் பிறந்தவர் அனைவரும் முத்தி பெறுவர்)

137. **பாங்குஆம்** - அதன் பக்கமாக

138. **இடம் பவனம்** - இடமும் கோயிலும்

**ஈதாக** - இதுவேயாக

**ஏத்தும்** - வழிபடும்

**காந்தர்** - காந்தம்போல் கவர்ந்து இழுக்கும் தன்மையுடையவர் (சிவன்)

**போர் அடும்** - போரில் கொல்லும்

139. **அலகு அம்பு** - அலகுபோன்ற கூரிய நுனி பொருந்திய அம்பு

**அரிக்கும்** - தாங்கும்

**அரியார்** - எளிதில் அறிவதற்கு இயலாதவர்

**பரிக்கும்** - ஆண்ட

140. **சமைத்த** - அமைத்த(கட்டிய)

**நன்றி** - நன்மை

141. **திருமஞ்சனம்** - சிறந்த நீராட்டு நீர்

திருக்காளத்திமலையில் திண்ணனார் வழிபட்டார்.

**திண்ணனார்** - கண்ணப்பர்

142. **துன்பு** - துன்பம்

**துணித்துறை** - துணிகளைத் தோய்க்கும் நீர்த்துறை.

**வன்பாய்** - மனவலிமையோடு

**பரிவட்டம்** - தெய்வங்களுக்குச் சாத்தும் உடை

**இன்புஆ** - இன்பமாக

143. **தணிவு அரிய** - நீங்குதற்கு அரிய அன்புடைய

**சாத்தும்** - சாட்டிய

**மணிமுடிசூழ்** - அழகிய மயிர்முடி சுற்றிய சடை முடியுடன்

**பஞ்சவடி** - அடியார்கள் சடைமுடியுடன் தொங்க விடுவது

**விடை** - காளை

144. **சேந்த** - சினந்து சிவந்த

**மூர்த்தியார்**- மூர்த்திநாயனார்

**முன்சேர்த்த சந்தனமும்** - முழங்கையைத் தேய்த்துச் சேர்த்துத் தந்த சிவந்த சந்தனமும்

**பூமன்** - அரசன்

145. **அரி புனைந்த** - திருமால் சாத்திய

**காதலொடு** - அன்போடு

**தண்மலர்** - கல்லாகிய குளிர்ந்த மலரும்

**போக்கிய மா** - உண்ணும் உணவாக.

146. **ஆக்கியமாறன்** - ஆக்கி விருந்தளித்த இளையான் குடி மாற நாயனார்

**மா கறியும்** - பெருமையான பிள்ளைக்கறியமுதும்

**தாயர்** - அரிவாள் + தாயர், அரிவாட்டாயர், அரிவாளையுடைய தாயர் எனலாம்.

147. **கார் ஆர்** - கருமை நிறைந்த

**கணம்புல்லர்** - கணம்புல்ல நாயனார் என்னும் அடியார்

**ஆரால்அமைத்து** - யாரால் பூசைப் பொருள்களைப் படைத்து

148. **வணங்கல் உறும்** - வணங்கமுடியும்? முடியா தல்லவா?

**அங்கணர்** - சிவபெருமான்

149. **அற்சனை** - அர்ச்சனை-வழிபாடு.

**ஆரூரர்** - சுந்தரமூர்த்தி நாயனார்.

150. **வைய்தாய்** - வைதாய் - திட்டினாய்

(பித்தனைப் பாட இயலாது என்று வேதங்கள் ஒதுங்கின)

151. **இமையோர்** - தேவர்கள்

**வேண்டேன்**- விரும்பேன்.

**மால்** - காம மயச்கம்.

152. **வெல்** - போர் வெல்லும்

**விரகம்** - காமத்தால் ஏற்பட்ட துன்பம்

**கரும்பு ஆனேன்**-கரும்பு போல ஆகிவிட்டேன்.

கரும்பினைக் கடித்துச் சாறு குடித்துச் சக்கை யாக்குவதுபோலக் காமம் என் இரத்தத்தைக் குடித்து வெற்று உடல் ஆக்கியது. உயிரை ஒட்டியது.

**நல்லவர்** - நல்லாசிரியர்

153. **தேம்பினேன்** - வாடினேன்.

செந்தாமரை மலர் பனியால் வாடும் என்பது வழக்கு.

**மிசை** - மேலே

*154.* **வெள்ளக் கொள்ளை** - வெள்ளப் பெருக்கு

திருஞான சம்பந்தர் திருக்கொள்ளம் பூதூர்க்குச் செல்லும் வழியில் வெள்ளம் பெருகி ஆற்றில் வரப் பதிகம்பாடி ஓடத்தைச் செலுத்தச் செய்தார்.

தலைவி, என்னுடைய காம வெள்ளத்திலிருந்து என்னைக் கரையேற்றிவிட வேண்டுமல்லவா? என்று கேட்கிறாள்.

*155.* **தள்**- தள்ளு, விலகிச்செல்

**மாறுஇட்ட** - பகைமை கொண்ட

**சாக்கியர்** - சமணர்

**சீறு இட்ட** - சினந்து வந்த, வேள்-மன்மதன்

**அது செய்யாயோ** - கழுவேற்ற மாட்டாயோ? (கழுவேற்றுவாய்)

**நீறு** - திருநீறு

*156.* **அரும் பின்**-அருமையான முதுகில் உள்ள

**கூன்** - வளைவு

திருஞானசம்பந்தர் 'மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு, என்ற திருநீற்றுப் பதிகம் பாடிக்

கூன் பாண்டியனது வெப்பு நோயையும் கூனையும் ஒழித்தார். இச்செயலைத் தமிழே செய்ததாகக் கொள்ளப்பட்டது.

157. **தப்பு அல** - நீ செய்தால், இவையெல்லாம் பிழை யில்லை.

158. **நீக்க அரிய** - ஒருவராலும் போக்க முடியாத

159. **வெந்தீ**- வெம்மை+தீ-கொடிய நெருப்பு.

**வேவாய்**-வேகமாட்டாய்.

திருஞான சம்பந்தர்க்கும் சமணர்க்கும் சொற் போர் நடந்தபோது, 'தளிர் இள வளர் ஒளி' என்ற தமிழ்ப் பாடலைப் பாடித் தீயில் இட, அவ்வேடு வேகாது நின்றது.

**கொங்கில் வந்து** - கொங்கு நாட்டில் உள்ள திருச்செங்கோட்டிற்கு வந்து

160. 'அவ்வினைக்கு இவ்வினை' என்ற பதிகம்பாடி அடியார்கள் பனியால் வாடிய நோயை ஒழித்தாய்.

**அப்பர்** - திருநாவுக்கரசர்

161. **மை** - கரிய, **வன்கல்** - வலிய கல்தூணுடன், **மிதப்பித்தாய்** - மிதக்குமாறு செய்தாய்.

திருநாவுக்கரசரைச் சமணர்கள் கல்தூணுடன் சேர்த்துக் கட்டிக் கடலில் தூக்கிப்போட அவர்,

'சொற்றுணை வேதியன்...'' என்ற நமசிவாயப் பதிகம்பாடி ஓடம்போலக் கல்தூணை மிதக்கச் செய்து கரையேற்றினார்.

**ஆக்காயோ** - எனக்கு உறவு உடையதாக ஆக்க மாட்டாயா?

**மிக்கு உயர்ந்த** - மிகவும் உயர்ந்த

162. **மன்றில் பனை**-மன்றத்தில் இருந்த பனையை (திருவோத்தூரில் ஆண்பனையைப் பெண்பனையாக மாற்றிய செய்தி கூறப்படுகிறது)

**புள்** - பறவை

163. **சாந்தினொடு** - சந்தனத்துடன்

**அன்பு உற** - என்னுடன் அன்புற்றிருக்க.

**உறவு** - நட்பு

**முன்பு இருந்து** - உனக்கு முன்னால் இருந்து

164. **முனியாது இருக்க** - பகை கொள்ளாமல் இருக்கும்படி

**ஓதாயோ** - சொல்லமாட்டாயோ?

165. **சின்னம்** - ஊதுகொம்பு

**காளம்**-எக்காளம் (ஊதுகுழல்வகையில் ஒன்று)

**சிவிகை** - பல்லக்கு

**பூட்டாயோ**-முத்துமாலைகளை நான் அணியச் செய்ய மாட்டாயோ

166. **இறந்தாள் அங்கத்தை**-இறந்த பெண்ணாகிய பூம்பாவையின் எலும்பை.

**ஆக்கினாய்**-நீ பெண் உருவமாக ஆக்கினாய்

**என் அங்கத்தை**-எலும்பாய் மெலிந்த என்னுடம்பையும் (என் உடலும் வற்றி எலும்பாயிற்று)

**பூம்பாவை**-அழகிய பாவையைப் போன்ற நல்ல வடிவம்

**மங்க**-வெளிப்படாமல் மறைய

167. **மா முதலை**-பெரிய முதலை

மூன்று ஆண்டுகளுக்கு முன் முதலை விழுங்கிய குழந்தையைத் திருப்புக் கொளியூர் அவிநாசியில் சுந்தரர் பாடல்பாடி வரவழைத்தார்.

**ஏய்ந்த உரை** - பொருத்தமான சொற்களையே

168. **செவி ஓர்ந்து** - செவியால் கேட்டு

169. **தேசிவரும்** - ஒளி நிறைந்த

**தேசு இவரும்** - ஒளிமேலோங்கிய

**அவரை** - சொக்கநாதரிடத்து

**நேசம்** - அன்பு

170. **தைவரினும்** - மனத்தால் தடவினும்

**அருள் காளை** - திருஞான சம்பந்தர்.

ஞானசம்பந்தர் மூன்றாண்டுப் பருவத்தில் தந்தையாருடன் சென்று பொய்கைக் கரையில் நின்று அழுதபோது அம்மையும் அப்பனுமாக வந்து ஞானப்பால் ஊட்டிக் காட்சி கொடுத்த வடிவத்தை, தந்தை 'பால் கொடுத்தது யார்?' என்று கேட்ட சமயத்தில் கைவிரலால் சுட்டிக்காட்டினார். அப்போது பாடியதுதான் 'தோடு உடைய செவியன்...' என்ற பதிகம்.

171. **வெள்ளி பூதரம்** - வெள்ளிமலை.

**வானவரை** - சிவபெருமானை

**ஐயாற்றில்** - திருவையாற்றில்

**அரசர்** - திருநாவுக்கரசர்.

நாவுக்கரசர் கயிலைமலைக் காட்சியைத் திருவையாற்றில் கண்டவர்.

'மாதர்ப் பிறைக் கண்ணி யானை' என்று தொடங்கிய பாடலில்,

''யாதும் சுவடுபடாமல் ஐயாறு அடைகின்றபோது காதல் மடப் பிடியோடும் களிறு வருவன கண்டேன் கண்டேன் அவர்திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்'' என்று வியந்து பாடினார்.

172. **மணி ஆறு** - திருமணி முத்தாற்றில்

**ஆரூர்**-திருவாரூர்

**கோ**-சுந்தரர்

173. **காளத்தி**-திருக்காளத்திமலை

**சொற்றவனும்**-பாடியவராகிய நக்கீரரும்

நக்கீரர் கயிலையைக் காணச் சென்று திருக் காளத்தியில் கயிலைத் திருவுருக் காட்சிகண்டு அதைப் பற்றிக் 'கயிலைபாதி காளத்தி பாதி' என்னும் அந்தாதி நூலைப் பாடினார்.

**கேள்**-அதற்கு மேலும் கேட்பாயாக!

174. **அம்மை இல்லாதவர்**-தனக்கெனத் தாயாக ஒருவரும் இல்லாதவர்

**தாமா அம்மை**- இருந்தவர் தாயாக ஒரு பெண்ணின் மகப்பேற்றுக்குத் தானே அவள் தாய் வடிவில் வநதவர்.

**அம்மை** - காரைக்கால் அம்மையார்

175. **வெள் ஆனை**-(ஆன்+ஐ)-வெண்மையான காளை

**மேற்கொண்ட** - ஊர்தியாக மேற்கொண்ட

**வெள் ஆனை** - வெள்ளை யானையின்

**வித்தகர்**-அறிஞர்(சுந்தரமூர்த்தி நாயனார்)

176. **விஞ்சு உவரால்** - மிகுதியான உவர்மண் வழிந்திருந்த தோற்றத்தால்

**அஞ்சலிசெய்து** - கைகுவித்து

**அன்பராய்**-அடியவராகிய சேரமான் பெருமாள் நாயனாரும் ஆகி

**சஞ்சரியா** - எங்கும் சஞ்சரித்து

177. **தென் கயிலாயவரை** - தென்கயிலாய மலைச் செல்வரிடத்துச் சென்றாயே

**உன்கையில் ஆகாதது**-உன் செயலால் முடியாதது உண்டோ? இல்லை

உன்னால் முடியும் தூதுசெல் என்பது பொருள்.

**என்கையில்**-என்று பலரும் கூறுவதால்

178. **அவள்**-உமை

**உக்கிரராம் சேயும்**-உக்கிர குமார பாண்டியன் என்னும் முருகக் கடவுளும்

**புரந்து இருக்கும்** - அரசு புரிந்த

**வாய்இனிய** - வாய்த்த இனிய

179. **செவ்வழி**-செம்மை+வழி-திருத்தமான வழியே செல்க.

**இயம்ப** - நான் சொல்ல

180. **எவ்வழியும்**-எவ்வழியாகச் சென்றாலும்

**வெல்வாய்**-வெற்றி பெற்று மீள்வாய்

'வேயுறு தோளி' என்ற பாடல் ஞானசம்பந்தர் பாடியது.

**சித்திக்குமே** - முற்றுப் பெறுமே.

திருமறைக்காட்டில் திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசருடன் இருந்தபோது பாண்டி நாட்டுக்கு வருமாறு வேண்டிக் கொண்டதைத் தெரிந்து நாவுக்கரசருக்குக் கூற அவர், சமணர்கள் உள்ள இடத்திற்குச் செல்வது நன்று அன்று. நாளும் கோளும் தீயனவாய்த் தோன்றுகின்றன என மறுத்தார். சிவனடியார்கட்குத் தீமை வராது. நாளும் கோளும் நன்றாம் என்னும் கருத்து அமைய ''வேயுறு தோளிபங்கன் விடம் உண்ட கண்டன்...'' எனத் தொடங்கி ''ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல அடியார் அவர்க்கு மிகவே'' என இறுதியில் முடியும் பதிகம்பாடி விடை பெற்றுச் சென்றார்.

*181.* **தடை**-இடயூறு, **ஐயாறு**-திருவையாறு

**பொன்னி**-காவிரி (குடகு மலையிலிருந்து பொன் தூள்களை வாரி வருவதால் பொன்னி எனப்பெயர் பெற்றது.)

காவிரி ஆறு தன்னைத் தடுத்தும் அவ் வெள்ளத்தின் மிகுதியைக் கடந்து சென்றவர் சுந்தரமூர்த்தி நாயனார்.

அந்த இடம் திருநனிபள்ளி என்பதாகும்.

**இடையிலே** - ஓர் இடத்திலே

*182.* **நெய்தலா** - நெய்தல் நிலமாக

**அதை** - அப்பாலைவனத்தை

**சோலைநிலம்** - பூஞ்சோலையாக

**மேல்ஆனார்** - தலைவர் ஆனார்.

*183.* **கூறும்** - எல்லோரும் வியந்து சொல்லும்படி

**பொதிசோறு** - கட்டுச்சோறு

திருப்பைஞ்ஞீலி என்ற கோயிலில் திருநாவுக்கரசருக்குச் சோறு கொண்டு வந்து சிவபெருமான் கொடுத்தார். சிவபெருமானே பொதிசோறு கொணர்வார் என்றால் வழிக்குத் துணையாகப் பொதிசோறு கொண்டு போக வேண்டுமோ? (வேண்டுவதில்லை)

*184.* **வீறாக**-பெருமையாக

**பொருள் காணார்** - அந்நூலில் உள்ள உண்மைப் பொருளைக் காணமாட்டார் பலர்.

**காணில்**-தம் கைக்குப் பொருள் வருவதை அறிந்தால்

**உனை** - உன்னை(தமிழை)

**அவர்பால்** - அத்தகைய கொடியோர்பால்

**மேவாதே** - போய்ச்சேராதே.

185. **எள்ளிடுவார்**-இகழ்ந்துபேசுவார்.

**சள்இடுவார்** - சள் என்று குரைத்துத் துரத்துவார்

186. **பாயிரம் முன் சொன்னபடி** - பாயிரத்தில் கூறியுள்ளவாறு

**அண்டாதே**-அடங்கியிருந்து படிக்காமல்

நன்னூல் பாயிரம் கூறியமுறை வருமாறு:

''கோடல் மரபே கூறுங்காலை...

எனத் தொடங்கும் நூற்பா.

187. **ஒண்பேதையர்** - மூடர்களில் சிறந்த முழு மூடர்களை

**நிகழ்த்தும்** - கூறும்

**பேதமையாம்**-அறியாமையாகும்.

188. **தான்காணான்**-ஒன்றும் தெரியாதவனாக மதிக்கப் படுவான். மூடர்களுக்கு அறிவுரை கூறுவோர் அவர்களுக்கு முன்னால், தாம் அறிவில்லாதவர் ஆவர்.

''காணாதான் காட்டுவான் தான் காணான் காணாதான்
கண்டானாம் தான் கண்ட வாறு.

குறள். 849.

**நவிலாதே**-வாய்திறந்து ஒன்றும் பேசாதே.

189. **ஆற்றின் அளவறிந்து**-கற்கும் முறை தெரிந்து ஆற்றின் அளவு அறிந்து கற்றவர் அவைக்கு அஞ்சார். அவ்வாறு முறையோடு கல்லாதவர் அவைக்கு அஞ்சுவர்.

''ஆற்றின் அளவறிந்து கற்க அவை அஞ்சா
மாற்றம் கொடுத்தற் பொருட்டு''

குறள்-725.

**கூற்றினர்பால்**-சொல்பெருக்கு உடையவரிடத்து

**கூடாதே**-அவர்களோடு நட்பு கொள்ளாதே

**போற்றாரை**-உன்னுடைய பெருமை தெரிந்து உன்னைப் போற்றாதவரை

190. **வேண்டாதே**-நீ விரும்பாதே

''கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை.'' குறள்-400

**பூண்டாய்**-மனத்துள் கொண்டுள்ளாய்

**ஆண்ட**-என்னை ஆட்கொண்ட

191. **வலவா**-வல்லவா-வல்லவனே!

**நல ஆடுதுறை**-நல்ல திருவாவடுதுறை

**உலவா கிழி** - உலவாத கிழி-கெடாத பொன் முடிப்பு.

எடுக்க எடுக்கக் குறையாத பொன். திருஞான சம்பந்தர் திருவாவடுதுறையில் இறைவன் அருளால் பொன் முடிப்பைப் பெற்றார்.

**நல விருப்பு அது**-நல்ல விருப்பத்தை

192. **ஆக்க வருசெங்கலை**-உண்டாக்க வந்த செங் கற்களை. திருநாவுக்கரசர் திருப்புகலூரில் செங் கல்லைப் பொன் ஆக்கினார்.

**கனகம்** -பொன்

**வல்லையே**-வல்லமையைப் பெற்றுள்ளாய்

**நோக்கு புகார்**-யாவரும் விரும்பிப்பார்க்கும் சிறப்புடைய காவிரிப்பூம்பட்டினம்.

193. **பாடியது ஓர் வஞ்சி நெடும்பாட்டால்**- புகாரைப் பற்றிப் பாடிய ஒரு வஞ்சி நெடும்பாட்டினால்

கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப் பாலை என்னும் நூலினால்

**கொற்றம்** - வெற்றி

கடியலூர் உருத்திரங்கண்ணனார் கரிகால் பெரு வளத்தானைப் பாடிப் பதினாறு கோடிப்பொன் பெற்றார்.

194. ''நல்லார்....திரு'' - திருக்குறள்-408.

**கல்லார்பால்** - கல்லாத கயவரிடத்து

195. ஏகாதே-செல்லாதே.

புசியாதே-உணவு உண்ணாதே.

மா கவிஞர்-பெரும்புலவர்

196. 'தாம் இன்புறுவது...கற்றறிந்தார்''-திருக்குறள் 399.

மா மகிமை - பெருஞ்சிறப்பு

197. ஆர்ந்தவர் - உண்டவர்

ஆறுமோ - நீங்குமோ?(நீங்காது)

198. தரித்து ஏகி - தங்கிச்சென்று

199. பின்போய் - புறங்காட்டி

பேர்ந்துஓடும் - பெயர்ந்து நீர் ஓடுகின்ற

வம்பாக - புதுமையாக

முழுகியே - நீராடி

200. சத்தந்தனை - இலக்கண நூல்களை

அகன்றுபோய் - கடந்து சென்று

202. வருதிருவீதி- காணப்படுகின்ற அழகிய வீதிகளை

சூழ்வந்தே - வலமாகச் சுற்றிவந்து

இருவினை - நல்வினை, தீவினை ஆகிய இருவகைப் பட்ட வினைகள்.

203. **மோதும்** - தொலைக்கும்

**தென்பால்** - தெற்குக் கோபுர வாயில் வழியாகச் சென்று

(தெற்குக் கோபுர வாயில் வழியாகக் கோயிலுக்குள் செல்வது பழங்கால வழக்கம்.)

204. **முறையின்** - முறையாக

**நேயம்** - அன்பு

**தளஇசையும்** - தளத்தின் பொருத்தமும்

**தன் அடைந்து** - இறைவனை அடைந்து

205. **தேறும் படிவர்** - தெளியும் விரதம் உடையவர்; தவ ஒழுக்கம் உடையவர்.

**படி நிறுத்தும்** - படிகளை அமைத்துள்ள

சிவலோகத்திற்கு ஏறிச்செல்லப் படிஅமைத்து ஏணிநிறுத்தி இருப்பதுபோலக் கோபுரங்கள் அடியிலிருந்து ஒன்பது நிலைகள் அமைந்து நிற்கின்றன என்பது விளக்கம் ஆகும்.

**வீறு உயர்ந்த**-பெருமை பெற்ற

206. **கோ மேவு** - தலைமைவாய்ந்த

நான்கு மேகங்களும் வந்து சுற்றி நின்று மதுரை அழியாமல் காத்தன என்பதும் அன்றுமுதல் நான்மாடக்

கூடல் எனப்பெயர் வழங்கப்பட்டது என்பதும் புராணம் கூறும் வரலாறு.

திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர் இவையே நான்கு என்றும் கன்னி, கரியமால், காளி, ஆலவாய் என்ற இவையே நான்கு எனவும் கூறுவர்.

207. **பூமேவு** - மலரில் பொருந்திய

**மட்டு** - தேன்,அளையும்-உண்ணச்செய்யும்

**மாளிகைபத்திஅறை** - மாளிகைகளில் வகுத்திருக்கும் வரிசை வரிசையான அறைகளின் ஒழுங்கையும்

**களி கூர்ந்தே**-மகிழ்ச்சி மிகுந்து

208. **இட்டமணி சிங்காதனத்தில்**-தேவேந்திரனால் இடப் பட்ட மணிகள் வைத்து இழைக்கப்பட்ட அரியணைமேல்

**திரிவோலக்கம்**-வீற்றிருக்கும் அரசு இருக்கை சொக்கநாதர்க்கு வாய்த்ததைப் போல

**ஒருவர்க்கு**-வேறு ஒரு கடவுளர்க்குக் கிட்டுமோ? கிட்டாது.

**பைங்கழல் சூழ்**-ஒளிவீசும் வீரக்கழல் கட்டிய

209. **தேம்கமல**-இனிய தாமரை மலர்போன்ற

**தேசு தெரிசனம்** - (சிவபெருமானின்) திருவடிக் காட்சியைக் கண்டு, தரிசனம்-தெரிசனம் என்று வந்துள்ளது.

**செய்தவர்க்கு**-அச்சிவபெருமானுக்கே

**பூ கமலக்கண்**-அழகிய செந்தாமரை மலரைப் போன்ற கண்ணை

**கொடுத்த புத்தேளும்** - பறித்துச்சாத்திய திருமாலும்

திருமால் கண்ணைப் பறித்துச் சிவபெருமான் திருவடியில் இட்டு வணங்கிப் பிறகு கண்ணையும் சக்கரத்தையும் பெற்றார் என்பது கதை.

**அமல** - தூய்மையான

210. **மைஇல்** - குற்றமற்ற

**வணங்கா** - வணங்காத

**கையில் அளித்த கடவுளும்**-கையில் கொடுத்த தெய்வமாகிய பிரமனும்

பிரமன் ஐந்து தலை பெற்றிருந்த தால் சிவபெருமானுக்குச் சமம் என்று செருக்குற்றான். செருக்குற்ற தலையே சிவபெருமான் கையில் பிச்சை ஓடுபோல ஒட்டிநின்றது என்று கூறுவர்.

**இழந்த மொய்**-நீங்கிய வலிமை

211. **மானம்**-பெருமை

**வகுத்த**-வகுத்துத்தந்த

**கடம்ப அடவி**-கடம்ப மரம் சூழ்ந்தகாடு,

**கடம்பாடவி** - மதுரை.

**மானம்** - விமானம்

**வகுத்த வானவன்** - வகுத்துத் தந்த இந்திரனும்

212. **அணிமலர்தாள்**- அழகிய மலர்போன்ற பாதத்தை

**நெஞ்சு ஊடு அழுத்தி**-நெஞ்சினுள் பதித்து

**மணிமுடிகள்** - மணிகள் அழுத்திய முடிகள்

**அழுத்தாதே** - ஒன்றோடு ஒன்று அழுத்தாமல்

213. **ஓது துனி** - கூறுகின்ற வெறுப்பு

**செற்றமுரண்**-தொலைத்த (நீக்கிய) வலிமையுடைய

**போதமுனிவர்**-ஞானமுனிவர்களும்

**புடைசூழ** - அருகில் சூழ்ந்துவரவும்

214. **திசைப்பாலர்** - திசைக்காவலர்கள்

**அத்தம்முதல்**-கண்ணாடி முதலியவற்றை

**தெரிசனக் கண் பார்த்து**-காட்சிக் குறிப்பைக் கண்டு

**பரவியே** - துதித்து

215. முப்பத்துமூவரும் ஏவல் செய்யவும்

216. **உதகஇருபாலின்**-வெள்ளம் இருபாலும் ஒதுங்குவது போல ஒதுங்க

217. **மகுடகோடி** - கோடிக்கணக்கான முடிகள்

வெள்ளம் இரண்டு பக்கங்களிலும் ஒதுங்குவது போல மண் உலகத்தவரும் விண் உலகத்தவரும் நெருங்கி முடியோடு முடி உராய்ந்து நெரிய நின்று வணங்கும் சினகரம் என்னும் கோயில் சிறப்புற்று விளங்கியது.

218. **பொருக்கென** - விரைவாக

219. **எந்தாய்** - என் தந்தையே

**ஏத்தும்** - துதித்துச் சென்ற

**திருத்தாளும்** - திருவடியும்

இடைக்காடன் என்ற புலவன் பாண்டியன் மேல் பாடல் பாடிக்கவி அரங்கேற்ற அப்பாடலை அவன் மதியாது வறிதே இருந்ததைக் கண்டு மனம் வருந்தி சொக்கநாதர் திருமுன்கூறிச்செல்ல, இடைக்காடன் தங்கியிருந்த இடத்திற்கே இறைவனும் சென்று இருந்தார் என்பது வரலாறு.

220. **தேறி** - தெளிந்து

**தென்பாண்டி நாடனுக்கு**-தென் பாண்டிநாட்டு அரசன் பொருட்டாக,

**மாறித் திரும்பும் அணிகுறங்கும்**- இடக்கால் வலக்காலாகத் திரும்பிய ஆடிய அழகிய தொடையும் என்று வேண்ட மாறி ஆடாத இயல்பைக் கண்டு தன் பாண்டியன் ஒருவன் காலை மாற்றி ஊன்றி ஆட வேண்டும் - கழுத்தினை அரியத் தொடங்க, பின்பு இறைவர் கால்மாறி ஆடினார் என்பது கதை.

221. **பணிக்கன்** - போர்த்தொழில் கற்பிக்கும் ஆசிரியன்

**மாறா** - பகையாக

**மணி கச்சு** - அழகிய இடுப்புப்பட்டை

**உடுத்த மருங்கும்** - இறுக்கிக் கட்டிய இடையும்

பணிக்கன் ஒருவன் பொருட்டாக அவன் பகைவனைக் கொல்ல அவன் வடிவமாகச் சென்று கொன்றதை அங்கம் வெட்டின படலம் கூறுகிறது.

222. **தொண்டு படுவந்தி**-அடிமையாகி வழிபட்ட வந்தியின் பொருட்டு

**வந்தி** - பிட்டு வாணிச்சியின் பெயர்

**அமையா** - அமைய(பொருத்தமாக)

**உதரம்** - வயிறு.

(பிட்டுக்கு மண் சுமந்த படலம்)

223. **அண்டும்** - ஒருதாயை அடுத்தும்

**பூண்மார்பும்** - அணி அணிந்த மார்பும்

(பன்றிக்குட்டிக்கு முலைகொடுத்த படலம்)

224. **ஆணிக்கனகம்** - உயர்ந்த மாற்றுடைய பொன்

**முடிஅழுத்த** - முடியில் பதிப்பதற்காக

**மலர் கையும்** - மலர்போன்ற கையும்

ஒரு பாண்டியனுக்கு முடிசூட்டுவிழா தொடங்கிய போது முடியில் பதிப்பதற்கு மாணிக்க மணி இல்லாமை யைக் கண்டு மாணிக்கம் விற்கச் சிவபெருமான் வந்தார் என்பது 'மாணிக்கம் விற்ற படலத்தால்' அறியலாம்.

225. **காணிக்கா** - உரிமைக்காக

**படலைஆத்தி** - தழைபொருந்திய ஆத்திமலரை

**பூணாமல்** - அணியாமல்

**வேம்புஅலரை** - வேப்பமலர் மாலையை

**வியன்மார்பு** - அகன்ற மார்பு

இறைவன் சுந்தர பாண்டியனாக வந்து அரசு உரிமையை ஏற்றபொழுது பாண்டிய மன்னர்களுக்கு உரிய வேப்பமாலையை அணிந்துகொண்டார் என்பது திருவிளையாடல் புராணம்.

226. **கொடி ஓம்பு** - காக்கை ஒழித்த

(கரிக்குருவிக்கு உபதேசம் செய்த படலம்)

**தீது இல்** - குற்றம் இல்லாத

227. **வாயிலா** - வாயிலாக

**குழைக்காதும்** - சங்கக் குழை அணிந்த காதும்

தமிழ்மொழி தங்கி வாழ இசைபாடுமாறு செவியுள் தும்புருவை வைத்திருக்கும் செய்தியைக் குறிப்பதாயிற்று.

தமிழுக்குத்தம் செவியை இடமாக்கினார் இறைவன்.

228. **வணிகப் பெண் நீரான்** - வைசிய குலத்துப் பெண் ஒருத்தியின் பொருட்டுச் சென்று

**தழுவி** - அவளைத் தழுவி

**ஆற்றி அருள்**-அவள்துயரத்தைப் போக்கி அருளிய

**தெண்நீரார்** - தெளிந்த நற்பண்பை உடையவர் (மாணிக்கவாசகர்)

229. **பண்சுமந்த பாட்டினுக்கும்**-இசையுடன் கூடிய பாடலுக்கும்

**பாவை** - பெண்,

உவமையாகு பெயராக வந்தியைக் குறிக்கிறது.

**கண் சுமந்து** - கண்களில் ஏந்தி

230. **களிகூர்ந்து** - மகிழ்ச்சி மேலிட்டு

**உள்** - உள்ளம்(மனம்)

**தாள்** - திருவடித் தாமரையை

**மண்டும்** - நெருங்கிய

231. **உடுக்குலம்** - விண்மீன் கூட்டங்கள்

**கோ குலம்**-தலைமைக் குலத்தைச் சார்ந்தது

**அடுக்கு இலங்குதீபம்**-அடுக்கு அடுக்காக விளங்கும் விளக்குகள்

**எதிராக** - எதிரே தோன்றவும்

**கடுத்திடேல்** - என்னைக் கோபித்து வெறுக்காதே

232. **வெங்கதிர்** - சூரியன்,வெண்மதி-வெண்ணிலவு.

**தங்கதீபம் ஆரதீபம்**-தங்கவிளக்கும் ஆரவிளக்கும்

**ஆரவிளக்கு**-முத்துமாலை போன்ற விளக்கு

தங்க விளக்கு வெங்கதிர்போலவும், முத்து விளக்கு தண்கதிர்போலவும் எரிந்தன.

233. **ஒரு மீன்** - ஒப்பற்ற மீனக்கொடி

**ஏங்கும்** - ஏங்கும்நான்

**துங்கவிடை** - உயர்ந்த இடபக்கொடி

**இடபதீபம்** - இடபவிளக்கு

இதுஒருவகைவிளக்கு; ஆராதனை (வழிபாட்டு)ப் பொருள்களுள் ஒன்று. அதுகாளை வடிவமாக அமைந்திருக்கும்

234. **தாம்ருகம்** - பன்றி.

**புருடாமிருகத் தீபம்**-புருடாமிருக வடிவுடைய விளக்கு

புருடாமிருகத் தீபம் என்பது ஒருவகை விளக்கு. புருடாமிருகம் போன்ற வடிவ விளக்கு சிவபக்திச் செல்வத்தை வளர்க்கும் என்று தலபுராணங்கள் கூறும். சிவ பெருமானுக்குத் திருவிழாக்காலங்களில் புருஷா மிருகமும் ஊர்தியாக அமைக்கப்பட்டுள்ளமை அதன் சிறப்பை விளக்குகிறது.

**போற்ற** - நின்று போற்றவும்

**மருவார்** - பகைவராக

235. **வரு** - வழிவழியாக வந்த

**பானுகுலம்** - சூரிய குலத்தார்

**வரல்கண்டு** - வருவதைப் பார்த்து

**அருகுஉலவும்** - அருகில் உள்ள

**இருசுடர்** - ஞாயிறு, திங்கள் என்ற இரு சுடர்கள்

236. **சொக்கர்** - சொக்கநாதர்

அக்கர+ஆலத்தி- அக்கராலத்தி-இது வடமொழிப் புணர்ச்சி.

**அக்கராலத்தி** - எழுத்து உருவங்கள் பொறிக்கப் பெற்ற வழிபாட்டுப் பொருள்

**தக்கவளோடு**-தமக்குத் தக்கவளாகிய உமாதேவி யாருடன்

237. **எற்கும்** - எனக்கும்

**கும்பதீபம்** - குடத்தில் ஏற்றிய விளக்கு

**வளைய** - சூழ்ந்து கொள்ளவும்

**சொற்கு** - தமிழ்ச்சொல்லுக்கு

238. **அற்பு** - அன்பு - வலித்தல் விகாரம்

**அற்புஊர்** - அன்புமிகுந்த

**ஈதுஎனல்போல்** - இதுதான் என்று காட்டுவது போல

**கனல்வாய்ப்ப**-தீச்சுடர்(அழல்) எழுந்து எரியவும்

**பொற்புஆக**-அழகாக

கற்பூரத் தட்டில் கனல் பற்றி எரிந்து கற்பூரம் மறைவது போலத் தொண்டரும் ஒளிமயமாய் இறைவனுடன் இரண்டறக் கலந்து மறைவர்; இதுவே முத்தி என்பதை எடுத்துக் காட்டியது கற்பூர விளக்கு.

239. **பானு** - சூரியன்

**பிறை** - பிறைநிலவு.

240. **துங்கம் முடி** - உயர்ந்த முடி

**வெண்குடை** - வெண்மையான குடை

**சோதிவிட** - ஒளிவிட்டு விளங்கவும்

*241.* **திரை** - அலை

**இரட்ட** - வீச

**விந்தை** - வேடிக்கை; விளையாட்டு.

*242.* **ஆடு அரவச் சித்தர்** - பாம்பாட்டிச் சித்தர்

*(சித்தர்களில் பாம்பாட்டிச் சித்தரும் ஒருவர்)*

**ஆலவட்டம்** - பெரியவிசிறி

இறைவன் எல்லாம் வல்ல சித்தராக வந்து திருவிளையாடல் புரிந்தான் என்பதை இது விளக்குகிறது.

*243.* **வால நறுந்தென்றல்** - தூய்மையான நறுமண மிக்க தென்றல் காற்றானது

**கோல** - அழகிய

வழிபாட்டுக்குரியனவாக அடுக்கு விளக்கு, தங்க விளக்கு, முத்து விளக்கு, இடபவிளக்கு, புருடாமிருக விளக்கு, தட்டம், அக்கரஆலத்தி, குடை, சாமரை, ஆலவட்டம், விசிறி முதலிய பொருள்களும் கூறப் பட்டன. இவற்றின் காட்சியையே ஆசிரியர் தற்குறிப் பேற்றமாக அழகாக அமைத்துக் காட்டியுள்ளார்.

*244.* **திருவனந்தல்** - விடியலில் காட்சிக்குரிய காலம் திருப்பள்ளி எழுச்சி என்றும் சொல்வர்.

**சேவிக்கும்** - வணங்கும்

**அனந்தம் வரு தேவர்** - பலவகையான வடிவமுடைய தேவர்கள்

**எதிர்மருவி** - திருமுன்பு நின்று

245. **போற்றுவாய்** - வணங்குவாய்

**புரோகிதர்** - வேத ஆகமங்களை ஓதி முதலில் இறைவனைப் புரோகிதர் வழிபடுவர்.

**தோற்றரவு செய்து** - உன்னுடைய வருகையைத் தெரிவித்து

246. **ஆற்றல்** - வலிமை

**உரிய** - வழிபாட்டுக்குரிய பொருள்களை

**படையா** - படைத்து

**ஒதுங்கி** - திருமுன் நில்லாமல் ஒரு பக்கமாக ஒதுங்கி நின்று

247. **மூவர்கவி** - தேவாரம்

திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடிய பாடல்கள் அனைத்தும் தேவாரம் என்று அழைக்கப்படுகிறது.

**கவிஞர்கள்** - தேவாரம் - திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் ஆகியவை.

**மூவராய் நின்றார்** - சிவபெருமான்

சிவபெருமான் மூவர் வடிவமாகவே நின்று திருவருள்காட்டி அவர்களுடைய செயல்கள் அனைத்தையும் தம் செயலாகவே விளக்கினார்.

**ஓதி** - பாடித்துதித்து

**ஓவாதே** - ஒழியாமல், நீங்காமல்

248. **சீ பாதம்** - சிறப்புப் பொருந்திய திருவடிகளை

**தீபம் மணி**-விளக்கு போன்ற மணிகளை உடைய

249. **பை நாகம்** - படத்தை உடைய பாம்பு

**சூழ்மதுரை** - சுற்றி எல்லை காட்டிய மதுரை

ஊழிக்காலத்தில் மதுரைநகர் அழிந்தபோது எல்லை காண முடியாமல் மன்னன் இறைவனை வேண்ட, தம் சடைமேல் இருந்த பாம்பை விடுத்து மதுரை நகர்க்கு எல்லை காட்டிவருமாறு ஆணை இட்டார். அது சுற்றி வந்து வாயோடு வால் நுனியைச் சேர்த்து எல்லை காட்டியது. அன்றுமுதல் மதுரை ஆலவாய் (திருவாலவாய்) என்று வழங்கப்பட்டது.

(திருவாலவாயான படலம்)

**மணி கை நாகம்** - அழகிய துதிக்கையை உடைய யானைகள்

**பாரம்** - சுமை (சுமந்த)

**மன் ஆக**-அரசனாக வந்து

250. **மை கண் கரும்பை**-மை பூசிய கண்களை உடைய கரும்பைப் போன்ற தடாதகைப் பிராட்டியாரை

**பிரியாத** - (உடலில் பாதியாக வைத்து) என்றும் பிரியாத

**முழுமுதலே** - உலகம் முழுவதற்கும் ஒரு முதல்வனே! புனல்-நீர்

251. **கன்னித்துறை**-கன்னியாகுமரித்துறை

**சிங்காதனத் துரையே** - அரியணைமேல் வீற்றிருக்கும் பாண்டிய நாட்டு அரசே!

**கோவே** - கடவுளே

252. **நாட** - அடியார்கள் மனத்தால் எண்ணியபோது

**பாவை** - கண்ணாடிப்பாவை(நிழல்)

கண்ணாடியைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு எச்செயலைச் செய்தாலும் நிழலாகப் பிரதிபலிப்பதைப் போல அடியார்கள் எண்ணிய செயல்களை இறைவன் அவ்வப்போது உடனாக விளையாடி முடித்தான் என்பர்.

253. **அன்புஉடையார்** - அடியார்கள்(அன்பர்கள்)

**சிந்தை** - மனம் (மகிழ்ந்து எதிர்ஓடிவந்து)

**விளையாட்டு** - விளையாடல்(64திருவிளையாடல்)

**வாராதோ** - காட்ட முடியாதோ?

**அருளால் வந்து** - திருவருளோடு முன் வந்து

254. **உலகில் பரவும் புகழ்** - உலகத்தில் பரவும் புகழ் சேர்ந்த

**மேவும் பெயர்** - பொருத்தமான பெயர்

**வேண்டாவோ**-இனிமேல் பெற வேண்டியது இல்லையோ?

255. **புக்குவந்தார்** - காண்பதற்கு வந்தவர்

**பொடி** - சொக்குப்பொடி

**இக்கு அணைத்த** - கரும்பினை வில்லாக ஏந்திய

256. **வேள்**- மன்மதன்

**சிறிய மங்கைதனை** - இளமையான ஒரு பெண்ணாகிய என்னை

**கோட்டி கொளல்** - துன்புறுத்தி மயக்கம் கொள்ளச் செய்தல்

**வல்லமையோ** - வலிமை ஆகுமோ?

**கங்கைஎலாம்** - கங்கையாற்று நீர்எல்லாம், மன்மதனை அரசாள விடுவது; காதல்கொண்ட மங்கையரைச் சேராது மேலும் மேலும் மயக்கத்துடன் வாட

விடுவது; மன்மதன் போர் தொடுக்க அவனைத் தடுக்காது விடுவது உன் செயல் ஆகாது.

மன்மதனைத் துரத்தி இப்பெண்ணைக் காப்பதே வல்லமையாகும் என்ற பொருளைக் குறிப்பினால் தலைவி வெளிப்படுத்தினாள்.

257. **நல்குதியே** - அருள்புரிந்தால்

**நங்கை** - இப்பெண்

258. **மை குவளை கண்ணி**-மை அணிந்த நீலமலர் போன்ற கண்ணை உடையவளின்,

**குவளைக் கண்ணி** - உவமைத் தொகை.

**வளை கவர்ந்து** - என் வளையலைக் கவர்ந்து சென்று

**விற்க** - வளையலாகக் கொண்டு சென்று பிறர்க்கு விற்பது

**கணக்கு உண்டோ** - முறையாகுமோ? (முறையாகாது)

**திக்குவளை** - எட்டுத்திசைபோல வளைந்த

259. **தோள் தாரும்** - தோள்மேல் அணிந்த மாலையும்

**வேம்பாய்** - வேப்பமாலையாகி

**தார்** - மாலை

**கேட்டோமே** - வெறுக்கும்படி கேட்டோம்; கேட்டுவேம்பாகக் கசந்து வெறுத்தோம்.

நீ இன்னும் மாலை கொடுக்கவில்லை.

**நாட்டம்உற** - கண்ணில் பொருந்துமாறு

260. **மின்னார்கலைகவர்தல்**-பெண்களின் ஆடையைக் கவரும் தொழில்

**காளையிடை இருந்து** - உனக்குக் காளை வாகனமாய் வந்த திருமாலிடத்து இருந்து காளையாய் உன்னைத் தாங்கும் திருமால் முன்பு கண்ணனாய் ஆயர்பாடியில் கோபி யரிடையே வளர்ந்தபோது ஆய்ச்சியர் சேலைகளைக் கவர்ந்து எடுத்துக்கொண்டு குருந்த மரத்தில் ஒளித்தான். அச்செயலைப் பார்த்து நீயும் உன்னிடத்துக் காதல் கொண்டுள்ள இவள் ஆடையைக்கவர்ந்தாயோ!

**காளை** - காளைமாடு, காளைப்பருவம் உடைய ஆண்மகனையும் உணர்த்தும்

**மீளாது** - மீண்டு வராமல்

261. **சென்று இலகுநாரை** - சென்று தங்கிய நாரை

**எய்தவிடல் ஆகாதோ** - சேர விடல் ஆகாதோ?

**அன்றி** - அன்றியும்

262. **அழல்குன்றே** - நெருப்பு மலையாய் நின்றவனே!

(நெருப்பு மாலையாய்த் திருவண்ணாமலையில் நின்ற வடிவத்தைக் குறிக்கிறது.)

263. **பொன் அனையாள்** - பொன்போன்றவள்

**வீடும் பொருந்தாதோ** - வீட்டிற்கு வருவது பொருந்தாதோ? (பொருந்தும்)

**மொழிஎல்லாம்** - சொற்கள் எல்லாம்

(இரசவாதம் செய்த படலம்)

பொன் அனையாள் என்பது திருப்பூவணம் என்ற ஊரில் வாழ்ந்த ஒரு பரத்தையின் பெயர். அவளுக்காக இரசவாதம் செய்யும் சித்தராய்ச் சென்று தங்கி இரும்பு முதலிய உலோகங்களை எல்லாம் தங்கமாக்கித்தந்தார் என்பது வரலாறு (இரசவாதம் செய்த படலம்)

அவள் வீட்டில் புகுந்திருந்த உனக்கு இத்தலைவி வீட்டில் புகுந்து தங்குவது ஏன் பொருந்தாது. இத்தகைய மொழிகளை எல்லாம் கூறி இடித்துரைப்பது யார்க்கும் வாய்க்காது. தமிழாகிய உனக்கே வாய்க்கும் என்று தலைவி விளக்கினாள்.

264. **வல்லாய்** - வல்லமை உடையாய்

**எவர்க்கு வாய்க்கும்** - எடுத்து உரைக்கும் சொல்லாற்றல் வேறு எவர்க்குக் கிடைக்கும்? ஒருவர்க்கும் இதைப்போன்ற வாய்ப்பு கிடைக்காது.

**நல்லாள்** - நல்லவள்

265. **கருணை** - திருவருள்

**அம்கயல் கண்ணி** - அழகிய கயல்போன்ற கண்களை உடையவள் (மீனாட்சி) (மீன+அட்சி= மீனாட்சி)

**ஐயர்** - தலைவர்

**திருமதுரை** - சிறந்த மதுரை நகரம்

நல்லாள், கருணைவிழியாள், அங்கயற்கண்ணி- என்பவை ஒருவரையே குறித்து வந்தன.

**நல்லாள்** - உயிர்களுக்கு நன்மையைப் புரிபவள்.

266. **சிவராச தானி** - சிவபெருமான் அரசுசெலுத்திய தலைநகரம்(மதுரை)

நம்பாக்கியத்தின் செய்தியே-நாம் செய்த புண்ணியத்தின் செயலே ஆகும்.

மதுரையைத் தமக்கு உரிய தலைநகராகக் கொண்டு வீற்றிருப்பது நாம் முன்னர்ச்செய்த புண்ணியத்தின் பயனே ஆகும் என்பது கருத்து.

**ஆனமையால்** - ஆதலால்

267. **அந்தர லோகம்** - (மேல்உலகம்) பொன்னுலகம், சுவர்க்கம் எனப்படும்.

சுவர்க்கத்தினும் மேலானது மதுரை.

**சுந்தரமீனவன்** - சுந்தர பாண்டியன்

**நின்சொற்படியே** - உன்னுடைய சொல்படியே.

நீ தூது சென்று சொல்லும் சொற்கள், சொக்கநாதர் வந்து என்னைக் கூடி எப்போதும் இன்பப் பேறு அளிப்பதற்கு உரியவையாயும் தக்கவையாயும் அமைந்திருத்தல் வேண்டும் என்பது தலைவியின் கருத்து.

268. **துறவாதே** - என்னை விட்டுப் பிரியாது இருந்து

**சேர்ந்து** - கூடிக் கலந்து

**சுக+ஆனந்தம்** - சுகாநந்தம் - இது வடமொழிப் புணர்ச்சி

இன்பமகிழ்ச்சி (ஆனந்தத்தை)

**நல்க** - அளிக்குமாறு

**மறவாதே** - என்னை மறக்காமல்

**தூது** - எனக்குரிய தூது

**வா** - மீண்டு வருக! என்று தலைவி தமிழை அழைத்துக்கூறினாள்.

வா எனக் குறிப்பிடுவது அங்கு மறந்து தங்கிச் சிவபெருமான் அன்பில் ஈடுபட்டிராதே என்பதை வற்புறுத்திக் கூறியதாகும்.

★★★

# நமக்குத் துணை நல்ல புத்தகங்களே!

| | | |
|---|---|---|
| 1 | நினைவின் நிழல்கள் -என். இராஜசேகர். ஐ.ஏ.எஸ் | 40 . - |
| 2 | விண்ணைத் தொடும் எண்ணங்கள் -என். இராஜசேகர். ஐ.ஏ.எஸ் | 40 . - |
| 3 | வியர்வையின் வெளிச்சங்கள் -என். இராஜசேகர். ஐ.ஏ.எஸ் | 40 . - |
| 4 | வாணிதாசன் பாடல்களில் உவமை நலம் - பாவலர் இலக்கியன் | 46 . - |
| 5 | சங்கநூலாய்வும் சாமியும் -புலவர் ந. வேங்கடேசன் | 75 . - |
| 6 | கவிஞர் வாணிதாசன் கதை -முனைவர் தி. தேவிதாசன் | 28 . - |
| 7 | அறிஞர் பார்வையில் கவிஞர் -கவிஞர்.கோப்பெருந்தேவி கல்லாடன் | 28 . - |
| 8 | நீதிக்கட்சி நினைவுகள் -செந்தாமரை | 28 . - |
| 9 | 50 சாதனையாளர் -'முகம்' மாமணி | 40 . - |
| 10 | 'ஜீவா' நாரண துரைக்கண்ணன் -'முகம்' மாமணி | 40 . - |
| 11 | மேடைக் கனிகள் -கலைமாமணி கல்லாடன் | 40 . - |
| 12 | பன்மொழிப் புலவர் -புலவர் கோவேந்தன் | 37 . - |
| 13 | கம்பர் ஒளிமணிகள் -பேராசிரியர் இரா. சேது | 36 . - |

14 தமிழ்விடு தூது - திறனாய்வு
-ஸ்டெல்லா மேரி ஜோஸ்பின் 26. -
15 ஒட்டக் கூத்தர் - நாடகம்
-கு. ம. கிருஷ்ணன் 20. -
16 வெற்றித் திருமகள்
- கு. ம. கிருஷ்ணன் 40. -
17 கவித்தென்றல் கல்லாடன்
-முனைவர் அ. கனகராசு 22. -
18 கல்விக் கனிகள்
-வெள்ளையாம்பட்டு சுந்தரம் 28. -
19 வண்ணக் களஞ்சியம்
-வெள்ளையாம்பட்டு சுந்தரம் 44. -
20 தாயுமானவர் கதை
-வெள்ளையாம்பட்டு சுந்தரம் 22. -
21 காளி வழிபாடு
-கோ. கிருட்டிணமூர்த்தி, எம்.ஏ., 28. -
22 திருக்குறள் கதைகள்
-திருக்குறளார் வீ. முனிசாமி 16. -
23 திருக்குறளில் நகைச்சுவை
-திருக்குறளார் வீ. முனிசாமி 32. -
24 மங்கையின் மாண்புக் கதைகள்
-(பாகம் 1) புலவர் அரசுமணி 28. -
25 -(பாகம்2) புலவர் அரசுமணி 27. -
26 நகைச்சுவைக் கொத்து
-உமா ராசன் 25. -
27 பேரறிஞர்களின் உவமைகள்
-கே .எஸ். லட்சுமணன் 17 .50
28 பாவேந்தரின் காளமேகம்
-புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் 6. -

★

மதுரைச் சொக்கநாதர்

# தமிழ்விடு தூது

## பொழிப்புரை



புலவர் ம.அய்யாசாமி